# வைதிக தர்ம வர்த்தனி



மலர் 13 | ஆசிரியர் : | விகாரிஹு
இதழ். 6 | ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா. | பங்குனிமீ

# விகாரி௵ பங்குனிமீ சிசிரருது. உத்தராயணம்.

| தமி. | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஶ்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | திங். | ப்ர. | 16-30 | உத். | 5-40 | சி. | த்வி. |
| 2 | 15 | செவ். | த்வி. | 13-00 | ஹஸ். | 4-05 | சி. | த்ரி. |
| 3 | 16 | புத. | த்ரி. | 8-45 | சித். | 1-42 | சி. | சது. |
| | | | | | சுவா. | 58-38 | | |
| 4 | 17 | வியா. | சது. | 3-52 | விசா. | 55-12 | சி. | பஞ் |
| | | | பஞ். | 58-32 | | | | |
| 5 | மார்ச் மீ 18 | வெ. | ஷஷ்஠. | 53-00 | அனு. | 51-25 | சி.ம. | ஷஷ்஠ |
| 6 | 19 | சனி | ஸப். | 47-25 | கேட். | 47-42 | சி. | சப். |
| 7 | 20 | ஞா. | அஷ். | 41-55 | மூல. | 44-02 | அ.சி. | அஷ் |
| 8 | 21 | திங். | நவ. | 36-38 | பூரா. | 40-10 | ம. | நவ. |
| 9 | 22 | செவ். | தச. | 31-43 | உத்தி. | 37-30 | சி. | தச. |
| 10 | 23 | புதன் | ஏகா. | 27-17 | சிர. | 34-55 | சி. | ஏகா. |
| 11 | 24 | வியா. | த்வா. | 23-28 | அவி. | 32-58 | சி. ம. | த்வா. |
| 12 | 25 | வெள் | த்ர. | 20-25 | சத. | 31-47 | சி. | த். ச |
| 13 | 1960 ௵ 26 | சனி ● | சதி. | 18-17 | பூரட். | 31-35 | ம. சி. | அமா |
| 14 | 27 | ஞா. | அமா. | 17-13 | உத்ர. | 32-25 | அ. | ப்ர. |
| 15 | 28 | திங். | ப்ர. | 17-25 | ரேவ. | 34-30 | சி. | த்வி. |
| 16 | 29 | செவ். | த்வி. | 18-55 | அசு. | 37-55 | சி. | த்ரி. |
| 17 | 30 | புதன் | த்ரி. | 21-45 | பர. | 42-33 | சி.அ. | — |
| 18 | 31 | வியா. | சது. | 25-52 | க்ருத். | 48-25 | ம. | சது. |
| 19 | ஏப்ரல் மீ 1 | வெள். | பஞ். | 31-05 | ரோ. | 55-12 | ம. சி. | பஞ். |
| 20 | 2 | சனி | ஷஷ்஠. | 36-58 | மிருக. | 60-00 | சி. | ஷஷ்஠ |
| 21 | 3 | ஞா. | ஸப். | 43-05 | ,, | 2-32 | சி. | சப். |
| 22 | 4 | திங். | அஷ் | 48-55 | திரு. | 9-52 | சி.அ. | அஷ் |
| 23 | 5 | செவ். | நவ. | 53-50 | புன. | 16-40 | சி. | நவ. |
| 24 | 6 | புதன் | தசமி | 57-27 | பூச. | 22-28 | சி. | தச. |
| 25 | 7 | வியா. | ஏகா. | 59-25 | ஆயி. | 26-48 | சி.அ. | ஏகா. |
| 26 | 8 | வெள். | த்வா. | 59-33 | மகம் | 29-25 | ம. சி. | த்வா |
| 27 | 9 | சனி | த்ர | 57-52 | பூரம் | 30-20 | சி. | த்ர. |
| 28 | 10 | ஞா. | சதி. | 54-30 | உத். | 29-25 | அ. | சதி. |
| 29 | 11 | திங். ○ | பௌ. | 49-42 | ஹஸ். | 27-05 | சி. | பௌ |
| 30 | 12 | செவ். | ப்ர. | 43-50 | சித். | 23-52 | சி. | ப்ர. |

10, 25உ ஏகாதசி, 11, 27உ ப்ரதோஷம், 13உ அமாவாசை, 15உ தெலுங்கு வருஷப்பிறப்பு, 18உ க்ருத்திகை.

---

அதி பரிசயத்தால் அலக்ஷ்யம் தோன்றும்.

यतोः धर्मः ततः कृष्णः

यतः कृष्णः ततो जयः

# வைதிக தர்ம வர்த்தனீ



धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

மலர் 13 | விகாரிஹூ பங்குனிமீ | இதழ் 6



## பொருள் அடக்கம்.



வருஷ சந்தா ரூ. 5.
தனிப்ரதி 44 ந. பை.

காரியாலயம் :
வைதிக தர்ம வர்த்தனீ,
கடவாசல்,
வடகால் போஸ்ட்,
சீர்காழி வழி,
(தஞ்சை ஜில்லா.)

## பின்னருசிர்ஹிலோக:

சிராத்தத்திலும் சிறந்த விருந்திலும் பற்பல பக்ஷ்யங்கள், பற்பல கறிகாய்கள் செய்வர். ஒன்றே செய்க! நன்றே செய்க! என ஏன் ஒன்றையே நன்ருகச் செய்யக்கூடாது? பலவகை எதற்கு? என யோசிப்போம்.

நாம் உயர்ந்தது என எண்ணுவது பிறர்க்கு மிக மட்டமாகத் தோற்றும். ஸ்ருஷ்டியிலேயே ஒருவரைப்போல் மற்றவர் இல்லை. ஒருவர் குறல் போல் மற்றவருக்கில்லை. ஒருவர் மனம்போல் மற்றவர் மனமில்லை. ஒருவருக்கு ருசியானது மற்றவருக்கு அருசியாகும். ஒத்திருப்பவர் அபூர்வமாக இருக்கும். அவரை விரல்விட்டு எண்ணி விடலாம்.

இங்ஙனம் பலவகை ருசியுள்ளவர் பொருட்டே பல விஷயங்களை வெளியிடுகிறோம். சிலது சிலருக்குப் பிடிக்காதிருக்கலாம். பலருக்குப் பிடித்திருக்கலாம். நமக்குப் பிடித்ததே எல்லோருக்கும் பிடிக்க வேண்டும் என எதிர்பார்ப்பது அழகாகுமா? விருந்தினர்களை உமக்குப் பிடித்தது எது என்ருல் சிலதைச் சொல்வர். ஒவ்வொருவரும் ஒவ்வொன்றைச் சொல்வர்! விருந்தளிப்பவர் என் செய்வது? எல்லாவற்றையும் செய்து தங்களுக்கு வேண்டியதை ஏற்றுக்கொள்ளுங்கள். மற்றதை எறியுங்கள் என்பரல்லவா?

நமது பத்ரிகைப் படிக்கும் சந்தாதாரர்களில் நூற்றுக்கு தொண்ணூறு பேர் இப்போது நடப்பதையே ஆமோதிக்கின்றனர். ஆயினும் குறைந்தவர் சொல்லுக்கும் மதிப்பளித்து கூடியவரை அவைகளை கவனிப்போம். சிலர் கூறும் யோசனையையும் ஸமயத்தில் கவனிக்கிறோம். "நான் கூறியபடி இல்லை ஆதலால் எனக்கு இது வேண்டாம்" என்று மாத்ரம் நிறுத்தாதீர்கள். நிறுத்திஞல் இருவருக்கும் கஷ்டமும் நஷ்டமும் ஏற்படும். பொருமையுடனிருந்து பிறர் கருத்துக்கும் மதிப்பு கொடுத்து உங்கள் பத்ரிகையை ஆதரியுங்கள். குறைவிருந்தாலும் இது ஒன்றே வைதிக தர்மத்தை அநுபவவாயிலாக வளர்க்கும் பத்ரிகை என்பதை மறவாதீர்கள்! நம் குழந்தை நமது சொல்லில் ஒன்றைக் கேளாவிடில் என் செய்வோம்? நமஸ்காரம்!

இதுவரையில் சந்தா அனுப்பாதவர்கள் தயைசெய்து உடன் அனுப்பிவைக்க வேண்டுகிறோம்.



பூணலில் ஆரம்பித்த ஸந்த்யை கடைசி வரை உண்டு.

## நூல் அறிமுகம்.

**ஸ்ரீ காமாக்ஷீ ஸுப்ரபாதம்:** சுலோகமும் அர்த்தமுமுள்ளது. ஸ்ரீ லக்ஷ்மீ காந்தசர்மா இயற்றியது. ஸ்ரீமடம் கேம்ப் படக் கடையிலும் P. T. பாணி & CO. திருவல்லிக்கேணியிலும், 33 ந. பை. ஸ்டாம்பு அனுப்பியும், நேரிலும் பெறலாம்.

**பக்தி ஸந்தேஹ த்வாந்த பாஸ்கரம்:** தமிழும் ஸம்ஸ்கிருதமும் கலந்து 80 பக்கமுள்ளது. விலை 75 ந. பை. ஸ்ரீ S. ராமஸ்வாமி தொகுத்தது. டில்லி பஜனை ஸமாஜம், கரோல்பாக், நியூடெல்லி பிரசுரித்தது. அங்கு கிடைக்கும். மருதாநல்லூர் ஸத்குரு ஸ்வாமிகள் பஜனை விஷயமாக சிஷ்யருக்கு ஏற்பட்ட ஸந்தேஹங்களுக்கு சாஸ்த்ரீயமான பதில் கூறியது இது. பஜனை கோஷ்டியைச்சார்ந்தவர் ஒவ்வொருவரிடமும் இருக்கவேண்டிய உயர்ந்த நூலிது.

**காமகோடி கோசஸ்தானம்:** 4, பிரான்ஸிஸ் ஜோஸப்தெரு, சென்னை 1. ஸ்ரீ பரமாசார்யாளின் அருள்பெற்று நாகராக்ஷரம் தமிழர்த்தத்துடன் 46 நூல்களை வெளியிட்டு அடக்க விலைக்கே தருகின்றனர். ஒவ்வொன்றும் மிக அரிய நூல். பின்னர் தனித் தனி அறிமுகம் வரும். பி. ஜி. பால் & கம்பெனியின் தலைவர் நன் முயற்சி மிக மிகக் கொண்டாடத்தக்கது.

**காமகோடி ப்ரதீபம்:** இது ஒரு அரிய மாதாந்த்ர தமிழ் பத்ரிகை. பங்குனி மீ 1உ வெளியாகும். ஸ்ரீ காஞ்சி காமகோடி பக்த ஜந ஸபையால் நடப்பது. ஸ்ரீ K. பாலசுப்ரமண்யய்யர், ஆசிரியர். பற்பல அரிய கட்டுரைகள் வருகின்றன. வருஷ சந்தா 5 ரூ. காமகோடி ப்ரதீபம், 13, கற்பகாம்பாள் நகர், மைலாப்பூர், சென்னை-4 என்ற விடத்திற்கு எழுதவும்.

**சார்வரி பாரத் கணித பஞ்சாங்கம்:** விலை 50 ந. பை. 4, கிருஷ்ணமாசாரி தெரு, சென்னை 17. தற்கால விக்ஞான கணிதத்தை ஒட்டியது. ஸ்ரீஜகத்குரு முதல் பல கணித மேதாவிகள் போற்றியது. ஸகல ஜோதிஷ விருத்தாந்தங்களும் அமைந்தது. நமது சந்தாதாரர் ஒவ்வொருவரும் வாங்கவேண்டுமென்பது நமதவா.

**தேவீ பாகவதம் பற்றி நற்செய்தி:** வெளியூர் ஏஜண்டிடமிருந்த 25 காபிகள் தற்செயலாக வந்தன. வேண்டியவர் உடனே எழுதவும். விலை ரூ. 8—0—0, 700 பக்கம். V. P. சார்ஜ் சுமார் 1-4-0. No. 2, ஸ்டேஷன் ரோடு, மேலமாம்பலம் சென்னை 17- குருகுலத்திற்கு எழுதி பெறலாம். தாமதிப்பவருக்கு அகப்படாது.

**ஸ்ரீ ச்யாமளா ஸஹஸ்ர நாமம்:** 51 பக்கம் தமிழ் அர்ச்சனை. ஸ்ரீ பூர்ணாநந்த வித்யாபீட வெளியீடு. பீட சிஷ்யர்களுக்கு இலவசம். 59, தம்புசெட்டி வீதி, சென்னை 1.

---

***அதனிடம் பலருக்கு அப்ரத்தை ஏற்பட்டுள்ளது.***
***வேறின்றி மரமில்லை - ஸந்த்யையின்றி கர்மா இல்லை.***

  



# அக்நி கார்யத்தின் விளக்கம்.

(பக்ஷிதீர்த்தம் ய. சுப்ரமண்யதீக்ஷிதர், ஸோமயாஜி)

ஷட்பாத்ர ப்ரயோகத்திலும் ஸ்தாலீபாகம் ஶ்ராத்தம் முதலிய வற்றில் பரிதிகள் லேபகார்யம் இவைகளுண்டு. ஜயாதி கிடையாது. ஶ்ராவணஹோமத்திலும் வ்ரதத்திலும் பரிதி ப்ரஹரணம் உண்டு. சருஇல்லாததால் லேப கார்யம் கிடையாது. பரிதியின் ஸ்தானத்தில் ஶம்யா (வண்டியில் மாட்டை பூட்டுவதற்கு உபயோகிக்கப்படும் கட்டை, கழுத்துக்குப் பக்கத்திலுள்ளது) ஏழு கர்மாக்களில் விதிக்கப்பட்டிருக்கிறது அவையாவன :–விவாஹம், உபநயநம், ஸமாவர்தனம், ஸீமந்தம், சௌளம், கோதாந வ்ரதம், ப்ராயச்சித்த கர்மாக்கள். இவை ஏழு தவிர மற்றெல்லாகர்மாக்களிலும் பரிதிகள்தான். ஶம்யாவந்தால் அவைகட்கு தூரே எறிதல் அபோஹநம் தான்.

பரிஸ்தரணத்தின் (அக்னிக்கு நான்கு புறமும் போடும் தர்ப்பம்) பயன் யாது? தர்ப்பம் தீர்த்தத்தின் ரஸமாகவும் ஓஷதிகளின் ரஸமாகவும் அமைந்துளது. அதைக் கொண்டு நான்கு புறமும் அக்நியை நாம் ரக்ஷிக்கிறோம். அதேபோல் அந்த அக்நிதேவர் யஜமானனைக் காப்பாற்றுவார். இவ்வுலகிலும் மறு உலகிலும் வேண்டியதைச் செய்வார். [தை 3 அஷ்டகம் 7 பிரஶ்நம் 6 அநுவாகம்]

**பாத்ரஸாதனம்:** ஹோமத்திற்கு வேண்டிய பாத்ரங்களை தர்ப்பத்தின் மீது வைப்பது. தேவ கார்யத்தில் இரண்டு இரண்டுகளாகச் சேர்த்தே கவிழ்த்து வைக்க வேண்டும் என கீழ்கண்டவேதம் கூறுகிறது. [தை-ஸம்ஹிதை 1 கா. 6 ப்ர. 8 அநு.] கர்மாவில் ஈடுபட்ட தம்பதிகள் பிரியாமல் இருப்பர் போலும்.

**ப்ரோக்ஷணீ:** அதற்கென ஸாதனம் செய்யப்பட்ட பாத்ரத்தில் தீர்த்தத்தை விட்டு பவித்ரத்தால் சுத்தம் செய்து மற்ற பாத்ரங்களை ப்ரோக்ஷிக்க வேண்டும். இப்படி ப்ரோக்ஷித்தால் பாத்ரங்கள் சுத்தமாகி ஹோமம் செய்வதற்கேற்றவைகளாக ஆகின்றன. [தை-3 அஷ். 2-ப்ர. 3-அநு]

---

சிலர் தர்ப்பணம் செய்கின்றனர். ஸந்த்யை கிடையாது.

**உத்பவனம்:** ப்ரோக்ஷணீ தீர்த்தத்தை பவித்ரத்தால் மூன்று முறை கிழக்குப் புறமாகத் தள்ளுவது, உத்பவந மெனப்படும். அது எதற்காக என்பதை கதை மூலமாக விளக்குகிறது ஸ்ருதி. [தை-3-அஷ். 2-ப்ர. 5-அநு.]

இந்த்ரன் வ்ருத்தாஸுரனைக் கொன்றான். இறக்கும் போது அந்த அஸுரன் ஜலத்தைப் பார்த்துக் கொண்டே இறந்தான். அதனால் ஜலத்திலுள்ள ஸாரம் வெளியே கிளம்பிவிட்டது. ஜலத்தின் ஸாரமாக முளைத்த தர்ப்ப பவித்ரத்தினால் ஜலத்தை ஸம்ஸ்காரம் செய்தால், ஜலத்திற்கு ஸாரமான அம்சம் மறுபடியும் உண்டாகி விடும். ஸாரமுள்ள ஜலத்தால் ப்ரோக்ஷித்தால் தான் ஹோம பாத்ரங்கள் சுத்தமாகி ஹோமத்திற்கு ஏற்றதாகும். உத்பவநம் விருத்ர திருஷ்டியால் இழந்த ஸாரத்தை மறுபடியும் ஜலத்திற்கு உண்டுபண்ணுகிறது.

ஸாரமானது தெய்வஸாரம் மாநுஷஸாரம் என இருவகைப்படும். தெய்வஸாரத்தில் இருவகைகள் உண்டு. நீரில் ஸ்நாநம் செய்பவருடைய பாபத்தைப் போக்குவது ஒரு ஸாரம். பாத்ரங்களைப் பவித்ரமாக்குவது மற்ற ஒரு தெய்விக ஸாரம். இந்த ஸாரமே தர்ப்பமாகி பாத்ர சுத்திக்குப் பயன்படுகிறது. மாநுஷ ஸாரமென்பது ஸ்நாநத்தினால் மநிதரது உடலின் மலத்தை அகற்றுவதாம்.

**ப்ரணீதா:** அக்னிக்கு வடபுறத்தில் பாத்ர ஸாதந இடத்திற்கு தென்புறத்தில் தீர்த்தத்தை வைத்து வருணனைக் கருதி பூஜிப்பது. ஹோமங்கள் ஆனபிறகு அந்தத் தீர்த்தத்தால் நம்மை ப்ரோக்ஷித்துக் கொள்வது. [3-அஷ். 2-ப்ர. 4-அநு] ப்ரணீதைப் பற்றிய விஷயத்தை வர்ணிக்கிறது.

ஸ்நாநத்தாலும் ஆசமநத்தாலும் தீர்த்தம் நமக்கு ஸ்ரத்தையையும் உடலில் ஒருசுறுசுறுப்பையும் அளிக்கின்றது ப்ரத்யக்ஷம். யக்ஞமானது எப்படி நமக்கு ஸ்வர்க்கம் முதலிய ஸுகத்தைத் தருகின்றதோ, வஜ்ரம் எப்படி சத்ருக்களை அடக்குகிறதோ அப்படி இந்த ப்ரணீதா தீர்த்தம் ஸ்வர்க்கத்தைத்தந்து நம் சத்ருவை அடக்கட்டும்.

மிகக் கொடியவனை விருத்தாஸுரனிடம் பயந்து ஓடி, இந்த்ரன் ஒருஸமயம் பிரும்மாவைச் சரணமடைந்தான். பிரும்மா அவனது வஜ்ராயுதத்தைத் தீர்த்தத்தால் அலம்பி இதனால் அஸுரனைக்கொல் என்றார். அங்ஙனமே

**மாத்யான்ஹிகம் ஆச்சோ என்றால்? அப்புரம் என்கின்றார்**

ஶக்ரன் பகைவனைக் கொன்று ஸ்வர்க்க ஸுகத்தை அநு பவித்தான். ஆதலால் பவித்ரத்தால் ஸம்ஸ்காரம் செய்யப் பட்ட ப்ரணீதைப் பகைவனையும் அடக்கி ஸ்வர்க்கத்தை யும் அளிக்கும். மேல் உலகிலிருந்து மழை ரூபமாக நமக்குக் கிடைத்த தீர்த்தம் அத்தகைய ஶக்தி வாய்ந்தது.

அன்றியும் அக்நி கார்யத்தில் ப்ரணீதை என்ற தீர்த் தம் உபயோகப்படுவதைக்குறித்து மற்றோர் கதைக்கூறு கிறது வேதம். அடிக்கடி தேவாஸுர யுத்தம் நடப்பது வழக்கம். ஒருஸமயம் அஸுரரிடம் தோல்வி யுற்று ஸகல தேவர்களும் அக்னியைச் சரணமடைந்தனர். அந்த அக்னியும் தீர்த்தத்தில் புகுந்தது. அதனால்தான் அக்னியும் தீர்த்தமும் ஸர்வ தேவதா ஸ்வரூபம் எனப் படுகிறது. [ஸகல தேவதைகளையும் நாடி அக்னியில்தான் ஹோமம் செய்கிறோம். தீர்த்தத்தில் தான் வருணனையும் மற்ற தேவதைகளையும் ஆவாஹநம் செய்து, அது அதற்கேற்ற மந்த்ரங்களை ஜபித்து அபிஷேகம் செய்துக் கொள்கிறோம்]

**ஆஜ்ய ஸம்ஸ்காரம்:** ப்ரணீதை பற்றிய விஷயம் முடிந்தது. அடுத்தது ஆஜ்ய ஸம்ஸ்காரம். தேவதை களுக்கு ஆஹாரமாக அளிக்கும் நெய்யை ஸம்ஸ்காரம் (ஶுத்தம்) செய்தபின்பே ஹோமம் செய்யவேண்டும். விரட்டி விறகு முதலியவைகளைக் கூட ப்ரோக்ஷித்தே அக்நியில் போடவேண்டும் என்பது சாஸ்த்ரம். அப்படியி ருக்க ஆஹாரமாக அளிக்கும் ஆஜ்யத்தை ஸம்ஸ்காரம் செய்தே அளிக்க வேண்டும் அல்லவா?

ஹோமம் செய்யப்போகும் அக்னியிலே ஆஜ்ய ஸம் ஸ்காரம் செய்யாமல் அதிலிருந்து தணல்களை எடுத்து வடக்கு புறத்தில் ஒரு விரட்டியில் வைத்து அதன்மீது நெய் பாத்ரத்தை வைத்து முதலில் ஒரு தர்ப்பத்தை கொளுத்தி அதன்மீது காட்டி அதன்பிறகு இருசிறிய தர்ப்ப நுனிகளை ஆஜ்யத்தில் போட்டு மற்றோர் தர்ப்பத்தைக் கொளுத்தி அந்த ஆஜ்யத்தை மூன்று முறை வலமாகச் சுத்திப்போட்டு ஆஜ்யபாத்ரத்தை வடக்கு முகமாக இறக்கி ஹோமம்செய்பவனுக்கும் அக்னிக்கும் இடையே அதற்காக போடப்பட்ட தர்ப்பத்தில் வைத்து வடக்கு புறம் வைத்த அக்னியை அக்னியுடன் சேர்த்து பவித்ரத் தால் ஆஜ்யத்தை கிழக்கும் மேற்குமாக மும்முறை

---

**மாத்யான்ஹிகம் ஆனபின்பே தர்ப்பணம் செய்யவேண்டும்**

(அறைப்பது போல்) தள்ளி பவித்ரத்தை அவிழ்த்து ஜலத்தைத் தொட்டு அக்னியில் வைப்பதுவரை ஆஜ்ய ஸம்ஸ்காரமாகும்.

இது ஒவ்வொன்றும் எதற்காகச் செய்யப்படுகிறது. அதனல் உண்டாகும் பயன் யாது? என்பது பற்றி ஶ்ருதி கூறுகிறது. ஹோமத்திற்காக நாம் ப்ரதிஷ்டை செய்த அக்னி கொஞ்சம் உக்ரமாகஇருக்கும். அதில் ஆஜ்யஸ்தாலியை வைத்து நெய்யை ஸம்ஸ்காரம் செய்தால் ஹோமம் செய்பவருடைய பத்நிக்குக்கேடு நேரிடும். ஆதலால் இந்த அக்னியிலிருந்து சிறிது அக்னியைத் தனியாக எடுத்து வடக்குபுறத்தில் வைத்து அதில் ஆஜ்ய ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். அதனல் ஆஜ்யமும் சுத்தமாகும். பத்னிக்கும் தீங்கு வராது. அப்படி ஆஜ்ய ஸம்ஸ்காரத்திற்காகத் தனியான அக்னியில் வைத்தவுடன் அந்த நெய் ஸ்வர்க்கம் செல்லப் புறப்படும். ஆனல் சிறந்த ஶக்தி இல்லாததால் இடையிலேயே நின்றுவிடும்.

(1) ஒரு தர்ப்பத்தைக் கொளுத்தி அதன்மீது காட்டினல் அது எல்லாவற்றிற்கும் நெய்யால் அபிகாரம் செய்வதால் உண்டாவது போன்ற ஶக்தியைக் கொடுக்கிறது. அதனல் ஸ்வர்க்கம் செல்ல பலம் ஏற்படுகிறது. [2-அஷ். 1-ப்ர. 3-அநு.]

(2) அன்றியும் இரு தர்ப்பாக்ரங்களை அந்த நெய்யில் போட வேண்டுமென்பது எதற்காக? மது கந்தரஸ என்ற இரு அரக்கர்கள் ஹோமத்திற்கான ஆஜ்யத்தை (ஆஜ்யரஸத்தை) அபஹரித்துச் செல்வார்கள். ராக்ஷஸர்களைக் கொல்லக்கூடிய ஶக்தி தர்ப்பத்திற்கிருப்பதால் அந்த இரண்டுதர்ப்பாக்ரங்களும் அவர்களை ஆஜ்யத்தினருகே அணுகாதபடி தூக்கி தூரத்தில் எறியும். ஆதலால் தர்ப்பாக்ரங்களைப் போடவேண்டும்.

(3) மற்றும் ஒரு தர்ப்பத்தைக் கொளுத்தி ஆஜ்யஸ்தாலியை மும்முறைச்சுற்றி எறிவது எதற்கு? அவ்விரு ராக்ஷஸர்களும் மற்றவர்களும் ஸர்வ தேவதாமயமான அக்நியையும்; ராக்ஷஸர்களைக் கொல்லும் தர்ப்பத்தையும் கண்டவுடன் அதன் அருகில் கூட அணுக மாட்டார்கள். ஹோமம் செய்வதற்கேற்ற யோக்யதையும் ஆஜ்யத்திற்கு ஏற்படுகிறது.

---

# சாந்தோக்ய உபநிஷத்.

சூர்யன் முதலில் உதயமாகிற பொழுதுள்ள ரூபத்தை ப்ரஸ்தாவமென உபாஸிக்கவேண்டும். அந்த வேளையில் ஒவ்வொருவரும் பலவித வேலையைச் செய்ய ஆரம்பிக்கின்றார்கள். கிரணங்கள் பரவுகின்ற வேளையில் ரூபம் ஆதி என உபாஸிக்கவேண்டும். அதை பக்ஷிகள் அநுஸரிக்கின்றன. ஆகாஶத்தின் பிடிப்பை விட்டு விட்டு கீழே இறங்குகின்றன. மத்யாஹ்ன ரூபத்தை உத்கீதமென உபாஸிக்கவேண்டும். அதை தேவர்களனுஸரிக்கிறார்கள். அது தேவர்கள் நடமாடுங்காலம். மத்யாஹ்னத்திற்கு அடுத்த ரூபத்தை ப்ரிதிஹாரமென உபாஸிக்க வேண்டும். அதையனுஸரித்து கிரணங்கள் கீழ் இருந்து மேலே செல்கின்றன.

ஸாயங்காலம் உள்ள ரூபத்தை உபத்ரவம் என்ற ஸாமாவாக உபாஸிக்கவேண்டும்.

காட்டிலுள்ள மிருகங்கள் மனிதர்களைப் பார்த்து மிகவும் பயந்து குகைகளில் போய் தங்குகின்றன.

அஸ்தமன ரூபத்தை நிதனமென உபாஸிக்க வேண்டும். அதை பித்ருக்கள் அனுஸரிக்கின்றனர். உபாஸகர்கள் அர்ச்சிராதிமார்க்கமாகச் செல்லும்பொழுது சூர்ய மண்டலத்தைத் தாண்டிச்செல்ல வேண்டும். ஆதலால் மற்றொருவிதமான ஸாம ஸம்பந்தமான சூர்யோபாஸனம் கூறப்படுகின்றது.

ஸாம உபாஸனை மிருத்யுவை ஜயிக்கக் கூடியது. ஸுகத்தைத் தரக்கூடியது. அதன் அவயவங்களால் அதை வகுத்து உபாஸிக்க வேண்டும். அது எழுவித பிரிவு உள்ளது.

ஸாமாவிலுள்ள "ஹிங்காரம்" என்பது மூன்று அக்ஷரங்கள். ப்ரஸ்தாவம் என்பது மூன்று அக்ஷரங்கள். பாக்கி ஒரு அக்ஷரம். இது ஒரு பங்கு.

(ஸம்ஸ்கிருதத்தில் பல மெய் எழுத்துகள் ஒன்றாகக் கூடினாலும் அ இ போன்ற உயிரெழுத்துடன் சேரும்போது ஒரே எழுத்தாகக் கருதப்படும். ஹிம் 1, கா 2, ரம் 3. ப்ர 1, ஸ்தா 2, வம் 3.)

ஆதி என்பது இரண்டு. ப்ரதிகாரம் என்பதுநான்கு. ஆக ஆறு அக்ஷரங்கள் மும்மூன்றாக வகுக்கப்படும்போது

---

தேவதைகளும் ஸந்த்யை இல்லா பூஜையை எற்பதில்லை.

இரண்டு பங்குகள். உத்கீதம் என்பது 3. அ. உபத்ரவம் என்பது 4 அ. ஆக 7 அக்ஷரங்களில் மும்மூன்ருக 2. பங்குகள் போக 1 அ. மிகுதி. அந்த ஒரு அக்ஷரத்தை மூன்ருக எண்ணுவது ஒரு பங்கு நிதனம் என்பது 3. அ. ஆக எல்லாம் சேர்ந்தால் 22 அ. ஆதித்யன் 21, அக்ஷரமுள்ளவன் என வேதம் கூறுகிறது. 12 மாதங்கள் 5 ருதுக்கள், 3 லோகங்கள் ஆதித்யன் 1-ஆக 21 அக்ஷரமுள்ள ஆதித்யனைவிட 22 அக்ஷரமுள்ள ஸாம, ஒரு எண்ணிக்கையால் ஆதித்யனை ஜயித்துவிட்டது. இப்படி உபாஸிப்பவன் ஜயத்தைப்பெறுவான்.

இங்ஙனமே பிரித்து பல கண்டங்களால் பல உபாஸனங்கள் கூறப்படுகின்றன.—ஸாம எல்லா வஸ்துக்களிலும் நிறைந்திருக்கிறது.

ஸாமத்தால் யாகத்தில் ஸ்தோத்ரம் செய்யும்பொழுது தேவர்களுக்கு அம்ருதத்தையும் பித்ருக்களுக்கு ஸ்வதா என்பதையும் மநிதர்க்கு ஆசையையும் பசுவுக்கு புல் ஜலங்களையும் யஜமாநனுக்கு ஸ்வர்க்கலோகத்தையும் ஸ்தோத்ரம் செய்பவன் தனக்கு அன்னத்தையும் அளிப்பதாக நினைத்துக்கொண்டு காநம் செய்யவேண்டும்.

அச்சு, உயிர் எழுத்துக்கள் ( அ முதல் அ: வரை ) இந்த்ர ரூபமானவை. சஷஸ முதலிய ஊஷ்மா எனும் எழுத்துக்கள் பிரஜாபதி ஸ்வரூபம். க முதல் ம வரை உள்ள எழுத்துக்கள் ஸ்பர்ஶம் எனப்படும். அவை மிருத்யு ஸ்வரூபங்கள். இவைகளை அறிந்து சரியாக உச்சரிக்காவிடில் இந்த்ரன் சிக்ஷிப்பான். ப்ரஜாபதி பொடிப்பொடியாக்குவார். மிருத்யு சாம்பலாக்கிவிடுவார். ஆதலால் எந்தெந்த எழுத்துக்களை எப்படி எப்படி உச்சரிக்க வேண்டும் என இங்கும் சீக்ஷாதி ஶாஸ்த்ரங்களிலும் கூறியபடி நன்கு உச்சரிக்கவேண்டும்.

யக்ஞம் அத்யயநம் தாநம் என்ற மூன்றும் தர்மத்தின் அடிப்படையானது. இவை மூன்றும் க்ருஹஸ்த ஆஶ்ரமத்திற்குரியது. தபஸ் என்பது வாநப்ரஸ்தம் ஸன்யாஸம் என்ற இரு ஆஶ்ரமங்களுக்கேற்றது. மூன்ருவது குருகுலத்திலேயே ஸதா வஸிக்கும் நைஷ்டிக பிரும்மசர்யத்தைச் சார்ந்தது. இங்ஙனம் அறிந்து நன்ருக அவைகளை அனுஷ்டிப்பவர் அமிருதநிலையை அடைவர்.

---

**15 நிமிஷத்தில் ஸந்த்யை. 10 காயத்ரீ செய்தாலும்போதும்**

# அஷ்டாவக்ர கீதை.

ஆசை என்பது எதில் தோற்றினாலும் சரி, ஸம்ஸார பந்தம் உனக்கிருக்கிறது என்று தெரிந்துகொள். பலமான வைராக்யத்தைக் கொண்டு எதிலும் ஆசை வைக்காதே. சுகமாக யிருப்பாய்.

ஜநந மரண மெனும் ஸம்ஸாரம் ஆசையால் உண்டாகிறது. ஆசை வடிவமான பந்தமே அது. அது அழிந்தால் மோக்ஷந்தான். ஸம்ஸாரத்தில் ஆஸக்தி இல்லாவிடில் ஆத்ம ஸ்வரூபத்தை அடையலாம். ஆநந்தம் தோன்றும்.

நீ நான் என்று கருதுவது ஒரேவஸ்து. அதுவும் சுத்த சைதன்ய வஸ்து. காணப்படும் ஸகல வஸ்துக்களும் ஜடமானவை. ஸத்துமல்ல, விரைவில் அழியக் கூடியவை. அவித்யை அல்லது மாயை என்பது ஒன்றுமில்லாத சூன்யமானது. இதைவிட நீ அறியவேண்டியது என்ன இருக்கிறது வேதாந்தத்தில்?

ராஜ்யம் புத்ரர் மனைவி உடல் ஸுகம் முதலியவைகளிடம் நீ அன்புவைத்திருந்தாலும் அவை ஒவ்வொரு ஜன்மாவிலும் உன்னைவிட்டுப் பிரிந்துவிடுகின்றன. ஏன் அவைகளில் ஆசையை வைக்கிறாய்?

தேடிய பொருள் போதும். அநுபவித்த ஸுகம் போதும். பண்ணின புண்யமும் போதும். ஸம்ஸாரமெனும் காட்டில் நீ அலையும்போது இவைகள் உனது மநதிற்கு சாந்தியை அளிக்கவில்லை அல்லாவா? சாந்தியைத்தரும் செயலையே கவனி.

உடல் மநஸ் வாக்கு இவைகளால் நீ செய்த கர்மாக்களால் உனக்கு எத்தனை ஜன்மாக்கள் கிடைத்தன? அவைகளில் எவ்வளவு துக்கத்தை அனுபவித்திருக்கிறாய்? ஆதலால் ஸகல கர்மாக்களையும் விட்டொழி.

**11-ம் அத்யாயம்.** ஒரு வஸ்து நீண்ட நாளிருப்பது. ஒன்று உடனே அழிவது. ஒன்று அடியோடு மாறுவது. ஆகிய இவைகள் எல்லாம் ஸ்வபாவத்திலேயே அப்படி இருக்கின்றன, என்ற நிச்சய புத்தியுடன் ஸுகதுக்கங்கள் வந்தபோது யாதொரு மாறுதலு மில்லாமலிரு. தானே அவைகள் பயனின்றி அழியும்.

ஈச்வரனே ஸகல வஸ்துக்களையும் நிர்மாணம் செய்பவன். வேறெதுவும் காரணமல்ல என்ற நிச்சய புத்தியுடன்

---

**நமது நேயர்களுக்காக இதை எழுத வில்லை.**

இரு. ஸகல ஆசைகளும் உனக்குள்ளேயே அடங்கி விடும். ஶாந்தியுடனிருப்பாய். எதிலும் பற்றுண்டாகாது.

நமக்கு ஆபத்து வருவதோ ஸம்பத்து வருவதோ எல்லாம் நமது கர்மாவிற் கேற்றபடி தெய்வத்தால்தான் உண்டாகின்றன என நிச்சய புத்தியுடன் இரு. த்ருப்தி, இந்த்ரிய அடக்கம், சோகமோஹமில்லாமை அனைத்தும் உண்டாகும்.

ஸுக துக்கம் ஜநந மரணம் முதலியன தெய்வத்தினால்தான் உண்டாகின்றன. அதன் காரணம் கர்ம என்று த்ருடமாக நம்பு. நம்மால் ஆவதொன்றுமில்லை என ஆயாஸப்படாமலிரு. இந்த நிலையில் நீ செய்யும் நற் கருமமும் தீய கருமமும் உனக்குப் பலனைத் தராது.

ஒன்றைப்பற்றி நினைக்க நினைக்கத்தான் துக்கம் உண்டாகிறது. அதை மறந்துவிட்டால் துக்க மில்லை. வேறு எதனாலும் துக்கம் உண்டாவதில்லை என நம்பினால் எதிலும் பற்று உண்டாகாது.

இந்த உடலைத்தான் நான் என எல்லோரும் கூறுவர். அது நான் அல்ல. நான் என்பவனுக்கு உடலே இல்லை. நான் என்ற சொல்லுக்குப் பொருளாக உள்ளது சுத்த சைதன்யமே என்ற நிச்சய க்ஞானத்தைப்பெற்றால் அதே முக்தியைப் பெற்றதாகும். அதற்குமேல் ஒன்றையும் நினைக்கமாட்டாய்.

கொசு முதல் சதுர்முக ப்ரும்மா வரையிலுமுள்ள ஸகல வஸ்துக்களிடமும் இருக்கின்ற சுத்த சைதன்யமே தான் நான் என்பது. (அதனால்தான் எல்லா பிராணிகளும் தன்னை நான் நான் எனக் கூறுகின்றன.) என்ற நினைவு த்ருடமாக இருந்தால், உன் மனதில் யாதொரு விகல்பமும் தோன்றாது. நீயே சுத்தனாவாய். உன்னைத் தேடி எது வந்தாலும் வராவிட்டாலும் ஶாந்தியுடன் இருப்பாய்.

ஒன்றைப்போல் மற்றொன்று இல்லாமல் பலவகை உள்ளதும், பல ஆஶ்சர்யமாகயிருப்பதுமாகத் தோன்றும் இந்த உலகம். ஒன்றும் உண்மையில் இல்லவே இல்லை. கனவுபோல்தான் தோற்றுகிறது என்று த்ருடமாக நினை. வாஸனையால்தான் இவை தோன்றுகின்றன. வாஸனையை மற. தோற்றம் மாத்ரமே இவை என நினைக்க நினைக்க மநம் சாந்தி அடையும்.

---





# பால பாரதம்.

பாலர் பகுதி.

## பீஷ்ம பர்வா. (மாசியின் தொடர்ச்சி.)

கே: அர்ஜுனன் பீஷ்மரை வில்லால் அடித்தவுடன் அவருக்கு ஏன் படுக்கை தயார்செய்துக் கொடுத்தான்? துர்யோதனன் அதைச் செய்யமாட்டானு?

ப: அவன் ஸமயோஜித அறிவில்லாமல் பஞ்சணி மெத்தை தலையணியளிப்பான். வீரனுக்கேற்ற சயனமில்லையது. அதேபோல் அவர் தீர்த்தம் கேட்க அர்ஜுனன் பர்ஜன்ய அஸ்த்திரத்தினுல் பூமியிலிருந்து ஊற்ருகவரும் ஜலத்தை அளித்தான்.

கே: அடிபட்டவுடன் அவர் (பீஷ்மர்) இறக்கவில்லையா?

ப: அவர் இஷ்டமானபோது இறக்கலாமென அவர் தந்தை கொடுத்த வரத்தை மறந்து விட்டாயா? அன்றியும் உத்தராயண காலத்தை எதிர்பார்த்து அதுவரை சரதல்பத்திலேயே படுத்திருந்தார் பீஷ்மர்.

கே: பிறகு என்ன நேர்ந்தது?

ப: எல்லோரும் பீஷ்மரைப்போற்றிப்பணிந்து சென்றபின் கர்ணன் ரஹஸ்யமாக வந்து தான் இழைத்த அபசாரத்தை மன்னிக்கும்படி வேண்டினுன்.

கே: அவர் என்ன கூறினுர்?

ப: நீ குந்தீ புத்ரன் ஆனதால் பாண்டவர்களுடன் சேர்ந்து வெற்றி பெற்று அரசனுகலாம் என்ருர். அவனதை ஏற்றுக்கொள்ளாமல் வீடுதிரும்பினுன்.

## துரோண பர்வா.

கே: பீஷ்மருக்குப் பிறகு யார் ஸேனாபதி யானது?

ப: துரோணர் தான். அதனுல் தான் துரோண பர்வா என்றே பெயர்.

கே: பீஷ்மர் இறக்கும் வரை யுத்தம் செய்யமாட்டேன் என்ற கர்ணனை உத்ஸாகப் படுத்த நண்பனுன

---

பின் எதற்காக அடிக்கடி இவைகள் வருகின்றன?

கர்ணனுக்கன்றே ஸேனுபதி பதவியை அளித்திருக்கவேண்டும் துர்யோதனன் ?

ப. ஆம்! வாஸ்தவமே கர்ணனே பீஷ்மரை வணங்கி (யுத்தம் புரிய உத்தரவு பெற்று ) குருவானதால் துரோணருக்கே அப்பதவி தரச்சொன்னுன்.

கே: அவருக்குமிக்க பிரிய சிஷ்யனை அர்ஜுநாதிகளுடன் எப்படி போர் புரிய துணிந்தார் ?

ப: கௌரவரிடம் இருந்ததால் பீஷ்மரைப் போல் மநதைப் பாண்டவருக்கு அளித்து உடலே கௌரவர்களுக்கு அளித்தார். துர்யோதனன் விரும்பியபடி தர்மரை உயிரோடு பிடித்துத் தருவதாகவும், ஆனல் அர்ஜுநன் அருகில் இருந்தால் முடியாது என்றும் வாக்களித்தார்.

கே: யுத்தரங்கத்தில் வந்த வீரர் யார்?

ப: அபிமன்யுவும் பீமனும் பூர்ண பலத்தைக் காட்டினர்கள். பீமன் கதையால் சல்யன் தோல்விப் பெற்ருன்.

கே: தர்மரை ஜீவனுடன் பிடித்தாரா ?

ப: தர்மரைக் காக்க தனக்குப்பதிலாக ஸத்யஜித் என்பவரை நியமித்து விட்டு ஸம்சப்தகர் என்ற கோஷ்டியுடன் போர் புரியச் சென்ருன். அந்த ஸத்யஜித்தைக் கொன்று தர்மரைப்பிடிக்க அருகில் வந்த போது அவர் பக்வமாகத் தூரேசென்றுவிட்டார்.

கே: துர்யோதநன் அர்ஜுனனை விலக்க ஸம்சப்தகர்களைக் கிளப்பினை ?. அர்ஜுநன் ஸம்ஶப்தகருடன் போர் புரிந்தானே அதில் வெற்றிபெற்ருனு?

ப: ஆம், வெற்றி அவ்வளவு ஸுலபமா ? முக்கிய வீரனை பகதத்தன் என்பவனைக் கொன்ருன். பலரைத் தோற்கடித்தான்.

கே: தந்தை ஸேனுபதியாகி வந்தபோது புத்ரன் அஶ்வத்தாமா அவரைக் காக்க முன் வரவில்லையா?

ப: போரில் புகுந்து பலபாண்டவ வீரர்களைக்கொன்று நீலன் எனும் சிறந்த வீரனையும் கொன்ருர்.

---

நம் நேயர் அதிக ஶ்ரத்தை கொள்ள வேண்டும்.

கே: துரோணர் பிரதிக்ஞையை (தர்மரை உயிருடன் பிடித்துத்தருவதை) நிறைவேற்றினரா? அர்ஜுனன் தானிங்கு இல்லேயே?

ப: நீ கேட்டதுபோல் துர்யோதனன் துரோணரைத் தன்னே ஏமாற்றி விட்டதாக வருந்தி கேட்க இன்று அதற்கு பதிலாக ஒரு மகாவீரனேக் கொல்கிறேன் என்ருர்.

கே: அப்படிக் கொன்ருரா? யாரைக் கொன்ருர்?

ப: ஆறு வீரர் ஒன்ருகச் சேர்ந்து பாலவீரனை அபிமன்யுவைக் கொன்ருர்கள்.

கே: ஐயோ! பாலகனேக் கொல்லும்படி விட்டு விட்டு பிமன் முதலிய வீரர்கள் என்ன செய்தார்கள்? அவனும் மஹா வீரனல்லவா?

ப: துச்சாஸநன் கர்ணன் இவர்களேத் தோற்கடித்து துர்யோதந புத்ரனை லக்ஷ்மணனேயும் கொன்ருன் அபிமன்யு. அன்று கௌரவர் அமைத்த வ்யூகத்தைக் கலேத்து உள்ளே புகுந்து போர்புரிய அபிமன்யு ஒருவனே சக்தி யுள்ளவன். பீமனே உள்ளே புகவிடாமல் ஜயத்ரதன் அன்று தடுத்து விட்டான். அதனுலவன் இறக்க நேர்ந்தது.

கே: கிருஷ்ணனும் அர்ஜுனனும் இருந்துகூட அபிமன்யுவைக் காக்கமுடியாமல் போயிற்றே?

ப: விதியை யாரால் வெல்ல முடியும்? பகவான் பூபாரத்தை அகற்ற வந்தவர். பாண்டவர் ஐவரையே காப்பதாக பிரதிக்ஞை செய்தார். அது பற்றி மற்ருேர் கதை ருசியானது. அதைக்கேள்.
அபிமன்யு ஆபத்காலத்தில் ஊதும் சங்கத்தை ஊதி தன்னேக் காக்க வரும்படி அழைத்தான். அது அர்ஜுனன் செவியில் விழுந்தால் அவன் ஓடி காத்திருப்பான். அது காதில் விழாதபடி அகாலத்தில் கிருஷ்ணன் சங்கத்தை ஊதினர். இப்போதென்ன சங்கம் ஊத? என்ருன் அர்ஜுனன். உனது வீர்யத்தைக்கண்டு ஸந்தோஷத்தால் ஊதினேன் என்ருர்.

கே: ஆஹா! ஸமயோசிதமான தந்த்ரம். அவன் புத்ர பிரேமையால் தன்உயிரைவிடுவானே! அர்ஜுனன்.

---

முதலில் நம் புத்ர. ஸஹோதரருக்கு கூற வேண்டும்.

ப : அதற்கு ஒருவழி தேடினர் மாயாவியான மாதவன். இந்த்ரனை ரஹஸ்யமாக அழைத்து அர்ஜுநன் வெற்றியுடன் வாழ வேண்டுமானால் இப்படிச்செய் என ஒரு உபாயம் கூறினர்.

கே : அதென்ன உபாயம்?

ப : நீ ப்ராம்மண வேடம் பூண்டு இறந்த உன் மகனுக்கு தீயிட்டு அதில் நீயும் விழுவதாக அபிநயம் செய். அர்ஜுனன் ஒரு புத்ரனுக்காக பிதா உயிரை மாய்த்துக் கொள்ளலாமா? என்று கேட்பான். நீ அதற்கு, நானும் அப்படித்தான் அன்யருக்கு உபதேசம் செய்வேன். தனக்கு வந்தால் அல்லவோ தெரியும்? என்று கூறு.

கே : ஆஹா! அந்த ஸமயத்தில் அர்ஜுநன் தன்புத்ரன் இறந்தால் தான் அதற்காக உயிரை விடுவதில்லை எனக் கூறும் படிச் செய்து விட்டாரா? பகவான். என்ன யுக்தி! என்ன ஸாமர்த்யம்!

ப : ஆம். தர்மரையே தேற்ற வியாஸர் வந்து பதினாறு ராஜாக்களின் கதைகளைக் கூறி அரும்பாடுபட்டுத் தேற்றினர்.

கே : அபிமன்யு இறந்ததைக் கேட்டு அர்ஜுநன் புழுவாய்த் துடித்திருப்பான் அல்லவா? பிறகு என்ன நடந்தது?

ப : பீமனை உள்ளே விடாமல்தடுத்த ஜயத்ரதனை இன்று மாலைக்குள் கொல்வேன். இல்லையேல் தீயிலிறங்கி உயிரைவிடுவேன் என ப்ரதிக்ஞை செய்தான்.

கே : தனது மாப்பிள்ளையைக் காக்க துர்யோதநன் தக்க முயற்சி செய்திருப்பானே! சும்மாயிருப்பானா?

ப : அவன் துரோணரை நயமாகவும் பயமாகவும் வேண்ட அவர் மந்த்ரஜபம் செய்து அழியாத கவசத்தை துர்யோதனனுக்கு அளித்து மாலை வரை அர்ஜுநன் ஜயத்ரதனை அணுகாதபடி சகடவ்யூகம் அமைத்து வீராவேசத்துடன் எல்லோரையும் யுத்தம் செய்யும்படி ஏற்பாடு செய்தார். அது இருக்கட்டும் பகவான் அர்ஜுநனைக் காக்கச் செய்த அரும் முயற்சியையல்லவோ சிலாகிக்கவேண்டும்:

---

**பிறகு நண்பர்களுக்குக் கூற வேண்டும்.**

  



# உபமன்யு பக்த விலாஸம்.

## 12. குங்குலியநாயனர்—(கலாநாதர்.)

சோழநாட்டிலே திருக்கட ஊரில் கலாநாதர் என்ருேர் வேதியர் இருந்தார். அவர் சிவ ஸன்னதியில் ஸதா குங்குல்ய தூபம் போடுவார். அதைத் தவிர வேறு வேலையைக் கவனியாமல் தனது பொருளை எல்லாம் கொண்டு குங்கில்யம் எற்றி வந்தார். வீட்டில் உள்ள பொருள்கள் ஆயின. உணவுக்கும் வழி இல்லை. மனைவி மக்கள் மூன்று நாட்களாக உணவின்றிவருந்தினர். கலாநாதர் குங்கில்யம் வாங்க தநமில்லையே என்று தான் கவலைப்பட்டாரே தவிர மற்றதைக் கவனிக்க வில்லை. குழந்தைகள் பசியால் மடிவரோ என்ற கவலையால் தனது மாங்கல்யத்தை அளித்து நெல்லு வாங்கும்படி மனைவி கூறினள். வழியில் குங்கில்யப் பொதிவர தாலிப் பொன்னை அளித்து அதை வாங்கி ஆநந்தத்துடன் ஆலயஞ் சென்ருர் கலாநிதி. பசி! பசி! எனக் கதறி களைத்து வீழ்ந்தன பிளளைக்கள். இறைவன் குபேரனை அழைத்து அக்குடும்பத்திற்கு அபரிமிதமான செல்வமளி என்ருர். இரவில் எதிர்பாரா வண்ணம் ஸகல பொருள்களும் வீட்டில் குவிய மனைவி அறுசுவை அன்னம் தயாரித்தாள். ஆலயத்திலுள்ள பகவான், கலாநாத! நீ வீடு சென்று புஜித்து வா! என்ருர். இதைக் கேட்டு வியந்தாரவர்.

திருப்பனந்தாள் (தாளாங்கிரி) என்ற க்ஷேத்ரத்தில் ஓர் அரசன் ஆலயத் திருப்பணி செய்து வந்தான். அங்கே சாய்ந்திருந்த லிங்கத்தை நிமிர்த்த வேண்டி எவ்வளவோ முயற்சி செய்தான். அது அசையவில்லை. தற்செயலாக தர்சனத்திற்கு வந்த குங்கில்ய நாயனர் குங்கிலியப்புகையளித்தார். சிவலிங்கம் நிமிர்ந்து அவரது சிறந்த பக்தியைக் காட்டியது. அவர் அடியார்களுக்கு அன்னமிட்டு தூபமளித்து சிவத் தொண்டால் சிவ ஸாயுஜ்யம் பெற்ருர். (பகவான் பக்த பராதீநன்.)

---

இந்த பிராமணன் ஓயாமல் என்ன எழுதுகிருர் பார்!

## 13. மாநக்கஞ்சாற - மாநகஞ்சநீச்வரர்.

கஞ்சாறு என்ற நகரத்திலே மானக்கஞ்சாறர் என்ற ஸேநாபதி ஒருவர் இருந்தார். அவர் நான்காம் வர்ணம். சிவபக்தியி லீடுபட்டவர். சிவனடியாருக்கு வேண்டுவதை அளித்து வந்தார். வெகு நாட்களாக புத்ர பாக்ய மில்லாதிருந்து சிவனை வேண்ட அதி ஸுந்தரியான ஒரு பெண் பிறந்தாள். கலிக்காமர் என்ற சிவபக்தர் இப் பெண்ணை மணம் புரிய நிச்சயித்து விவாஹத்திற்கு நாள் குறித்து ஸகல ஏற்பாடுகளும் செய்து முடிந்தன. இல்லை எனாது அடியாருக்கு அளிக்கும் சேனாபதியின் பக்தியைப் பரீக்ஷிக்க சிவன், அடியார் உருவெடுத்து சேனாபதியின் வீட்டிற்கு வந்தார். அவர் வழக்கப்படி கன்யகையுடனும் மனைவியுடனும் அவரை வணங்கி பூஜித்தார். விவாஹப் பெண் நமஸ்கரிக்கும்போது இவளது தலைமயிரைப் பின்னலுடன் எனக்கு அளிப்பாயா? என்றார். அவர். வேறொன்றும் பேசாமல் கத்தியால் அதை அறுத்துத் தந்தார். ஆனால் உடனே வந்த அடியார் மறைந்தார். விருஷாபாரூடனான சிவன் அவரைக் கொண்டாடி தன்னருகிலேயே இருக்கும் அருளைத் தந்தார். கன்யகையின் கேசமும் முன்போல் வளர்ந்தது. கலிக்காமரும் இதைக்கேட்டு ஆச்சர்யமடைந்து உயர்ந்த ஸம்பந்தமென அவளை மணந்தார். பக்தனையே பகவான் பரீக்ஷிப்பார்.

## 14. அரிவாள் தாயநாயனார் - சங்குலாதாயனார்.

சோழநாட்டிலே கண்மங்கலம் என்ற ஊரிலே வேளாளர் குலத்திலே நாயனார் என்றோர் சிவபக்தரிருந்தார் அவர் ப்ரதி தினமும் பகவானுக்கு சென்நெல் சோறு செங் கீரை மாவடு இவைகளைக் கொண்டுபோய் ஆலயத்தில் நிவேதனம் செய்வார். சிறந்த சென்நெலைப் பகவானுக் களித்து மட்டமான கார்நெல்சோற்றை உண்பார். ஒருநாள் எவ்வளவு பாடுபட்டும் சென்நெல் கிடைக்கவில்லை, அன்னமில்லாவிடினும் கீரையேனும் மாவடுவுடன் பகவானுக்கு அளித்து மிகுதியைப் புஜித்து வந்தார். கீரையும் மா வடுவுங்கூட கிட்டாமல் போயிற்று. நீரை நிவேதநம் செய்து அதை அருந்தி ஜீவித்தார். உடல் பலம் குன்றிற்று.

---

என்று நண்பரிடம் இதை முதலில் காட்டட்டும்,

எனினும் நித்யம் ஆலயம் செல்வது தவறுவதில்லை. தற்செயலாக ஒருநாள் செந்நெல்லும் செங் கீரையும் மாவடுவும் கிட்டின. பகவானுக்குப் பசி ஆர இவைகளை அளிப்போம் என எடுத்துச் சென்ருர். பல நாள் உணவில்லாததால் அவரது கால்கள் பின்னிக் கொண்டு கீழே விழுந்தார். அவைகள் விழுந்து சிதறின. தன் உடலை உயிரை பசியை எண்ணவில்லை! ப்ரபுவுக்கு அன்னமில்லாமல் போயிற்றே! எப்படியான் கோவில் செல்வது? இனி யான் உயிருடன் இருந்துதான் என்ன பயன்? என தன் கழுத்தைக் கத்தியால் வெட்ட ஆரம்பித்தார். பகவான் அவர் கையைப் பிடித்து நிறுத்தி கீழே சிந்தியவைகளைத் தானே உண்டதாகக் காட்டி மாவடு கடிக்கும் சத்தமும் அவர்காதில் விழும்படிச்செய்தார். அந்த தம்பதிகளுக்கு உடனே கைலாஸமளித்தார். அரிவாளால்வெட்ட ஆரம்பித்ததால் அரிவாள்தாய நாயனர் எனப்பட்டார். (**சிவன் வேண்டுவது செந்நெல் அல்ல. பக்தியே.**)

## 15. ஆனய நாயனர் — கோநாதர்.

சோள தேசத்தில் மழநாட்டில் யாதவர் குலத்தில் ஒரு சிவபக்தன் உதித்தான். பசுக்களை மேய்ப்பது அவன் தொழில். ஆயினும் பசுபதியைப் பஞ்சாக்ஷர மந்த்ரத்தால் குழல் ஊதிப் பாடி பரவசமாவான். ஒரு நாள் இவன் பாடுவதைக் கேட்டு அசை பொருள் அசையாப் பொருள் அனைத்தும் அசைவின்றி நின்றன. மந்த்ரத்தில் சிறந்தது பஞ்சாக்ஷரம்! உபாஸனையில் நாதோபாஸநம் உயர்ந்தது! வாத்யத்தில் மேலானது வேணுகாநம்! இம்மூன்றுடன் பக்தியும் கலந்தது. பரமசிவனும் பரவசமாகி பார்வதியுடன் அவன் எதிரில் தோன்றி பரமாநந்தம் அனுபவித்தார். நீ கைலாஸம் வந்து என்றைக்கும் என்னருகே இங்ஙனம் பாடிக்கொண்டே இரு என அவனை அழைத்துச் சென்ருர். (**காநப்ரியன் கைலாஸ நாதன்.**)

## 16. மூர்த்திநாயனர் — மூர்த்திநாதர்.

மதுரைமாநகரில் மூர்த்தி என்ருேர் சிவபக்தர் இருந்தார். அவர் பகவானுக்குச் சந்தநம் அரைத்துத்தருவ

தையே நித்ய கர்மாவாகக் கொண்டவர். சமண அரசன் ஒருவன் பாண்டியனைப் போர்ல் கொன்று தான் மதுரையை ஆண்டு வந்தான். சிவ சின்னமணிந்தவர்களையும் சிவதொண்டர்களையும் வெறுத்தான். நல்லவேளையாக சிவாலயத்தைப் பாழ்படுத்த வில்லை. ஆதலின் மூர்த்தி தைர்யமாக சந்தனத் தொண்டு நடத்திவந்தான். வியாபாரிகள் அவருக்குச் சந்தனக்கட்டைத் தரலாகாதென உத்தரவிட்டான் அரசன். கட்டை அகப்படாமல் போகவே தவித்தார். ஒன்றும் தோன்றவில்லை! தனது கரங்களையே கட்டைபோல் கருதி அரைத்தார். தோல் நரம்பு எலும்புகள் தேயும் வரை அரைத்தார். ரத்தம் வருவதையும் வலியையும் அவர் கவனிக்கவில்லை.

கருணா மூர்த்தி மூர்த்தியின் பக்திக்கும் பரவசமானார். அவனது கரங்களைத் தனது கரங்களால் பிடித்து ''நிறுத்து இதை, நீயே அரசனாவாய்'' என்றுகூறி மறைந்தார். பக்தன் உள்ளம் பூரித்தது. கைகள் முன்போல் ஆயின. திடீரென சமண ராஜன் இறந்தான். பழக்கப்படி, பட்டத்து யானையின் கண்ணைக்கட்டி அதனிடம் மாலையைத் தந்தனர். அது மூர்த்தியின் கழுத்தில் மாலையிட்டு அவனை அழைத்து வந்தது. மந்திரிகளும் குடிகளும் சிவபக்தரானார்கள். அரசனுக்குரிய விலை உயர்ந்த ஆடை ஆபரணங்களை அகற்றி விபூதி ருத்ராக்ஷங்களையே அணிந்து சந்தனகைங்கர்யத்துடன் ராஜ்யபாரம் செய்தான். (சந்தனாபிஷேகம் ராஜ்யத்தைத் தரும்.)

## 17. முருக நாயனார் — (ஸ்கந்த நாதர்.)

ஸரணக்ராமம் என்ற திருப்புகலூரில் ஸ்கந்தநாதர் என்றோர் வேதியரிருந்தார். அவர் அன்றன்றும் ஆந்நிக கடமைகளை முடித்து உத்யானங்களுக்குச் சென்று பல வகை மலர்களைப் பறித்து விசித்ரமான மாலை தொடுத்து பகவானுக்கு அர்ப்பணம்செய்வார். ஸதா பஞ்சாக்ஷரீ ஜபம் செய்வார். திருக்ஞான ஸம்பந்தருக்கும் திருநாவுக்கரசருக்கும் நண்பராகி முடிவில் பகவானிடம் சேர்ந்தார். (புஷ்பமாலை ஸத்வாஸனையைத்தரும்.)

# தந்தைக்கு உகந்த தனயர்.

பாரதகேஸரி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

புராதனமான தர்ம ரஹஸ்யங்களைக் கேட்பதும், அவைகளை எடுத்துரைப்பதும் மிக்க மஹிமையுள்ளது என்பதற்கு இந்த யயாதி அஷ்டக ஸம்வாதமே ஓர் எடுத்துக்காட்டாக அமைந்திருக்கிறது. மேலுலகத்திலிருந்து விரைந்து விழுந்துகொண்டிருப்பவன் யயாதி. அவனை அங்கேயே நிறுத்திவிட்டு, விடாமல் தர்ம நெறி முறைகளைக் கேட்டவண்ணம் இருக்கிறான் சிறுவன் அஷ்டகன். (இந்த அஷ்டகனின் ஆர்வம் விசித்திரமானது.) கேட்கிற கேள்விகளோ அனைவரும் பயன் பெறக் கூடிய தொன்மையான தரும ஸூக்ஷ்மங்கள். சொல்லுபவரோ தருமத்தை ஒழுங்காக அனுஷ்டித்து மேலுலகம் சென்ற ராஜரிஷி. கேட்பவனோ தவ நெறிக் கொழுந்து. இவை வீண்போகுமா ? கீழே விழுகிற யயாதியை பூமி சம்பந்தம் படாமல் ஆகாசத்திலேயே நிறுத்திவிட்டது. விதிவசமாக ஒருவனுக்கு அழிவு ஏற்பட்டாலும், அவன் அனுஷ்டித்த தார்மீக சக்தியே அவனைக் கைதூக்கிக் கரையேற்றும் என்ற பெரியோர்கள் வாக்கை மெய்ப்பிக்கும் சரிதம் இது.

அஷ்டகன் மேலும் மேலும் கேட்டவண்ணம் இருக்கிறான். யயாதியும் உவகையுடன் பதில் அளிக்கிறான். நான்கு ஆச்ரமங்களில் நிலைபெற்றவர்களின் (ப்ரும்மசாரி, கிருஹஸ்தன், வானப்ரஸ்தன், ஸந்யாசி) முக்கிய கடமைகளை விவரிக்க வேண்டினான் அஷ்டகன்.

பிரும்மசாரிக்குக் குருவின் பணிவிடையும், தன்னடக்கமும், வித்யாப்யாஸமுமே முக்கியமானது. இவைகளில் தேர்ச்சிபெற்று இல்லறம் புகுந்தால், அங்கு அவன் தரும வழியில் பொருளைத் தேட வேண்டும்.

---

*அச்ரத்தையுடனாவது பண்ணித் தொலைப்போம்*

ஈட்டின பொருளை நற்கருமங்களிலும், தான தருமங்களிலும், அதிதி ஸத்காரம் முதலியவைகளிலும் செலவிட்டு மற்றவருடன் பகிர்ந்து, லோபமின்றி வாழவேண்டும். இல்லறத்தில் முதிர்ச்சி கண்டதும், (மனப் பக்குவம் பெற்றதும்) வானப்ரஸ்தனுடைய தருமத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். உயர்வுள்ள வானப்ரஸ்தனை, முனி என்றும் யதி என்றும் அழைப்பர். அவன் கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைகிறவன். ஆகாரம் முதல் தன் எல்லாச் செயல்களையும், இந்த்ரிய வியாபாரங்களையும் சுருக்கிக்கொள்ளுகிறவன். நான்காவது ஆச்ரமி ஸந்யாஸி எனப்படுவான். விருப்பு வெறுப்பு அற்ற ஞான நிலையே இவனுடைய குணம். எல்லாவற்றையும் தியாகம் (துறவு) செய்தவன். தன் தவத்தால் கிடைத்த புண்ணிய பலனையும் விரும்பாதவன். இவனால் இவன் குலத்தோர் முந்தி பத்து பேரும், பிந்தி பத்து பேரும், நடுவில் உள்ள தானும், ஆக இருபத்தொரு பேரும் ஸுக வாழ்வு பெறக் காரணமாகிறான்.

இவ்விதம் ஆச்ரமங்களின் பெருமையைக் கேட்ட அஷ்டகன், முன்புசொன்ன வானப்ரஸ்தனான முனியின் நிலையை நன்கறிய விரும்பினான்.

***அஷ்டகன்:*** மௌன வ்ரதம் கொண்டவன் முனி. இந்த முனிவர்களை கிராமத்திலும் காண்கிறோம். வனத்திலும் காண்கிறோம். வானப்ரஸ்தன் என்றால் வனத்தில் நிலைபெற்றவன் என்றாகிறது. அப்பொழுது கிராமத்தில் வஸிக்கும் முனி யார் ?

*யயாதி:* நீ கேட்டது சரியே. முனிவன் ஒருவன் கிராமத்தில் வஸித்தாலும் வனத்தில் வஸித்தாலும் மனப் பாங்கில் ஒன்றுதான்.

**अरण्ये वसतो यस्य ग्रामो भवति पृष्ठतः ।**
**ग्रामे वा वसतोरण्यं समुनिस्स्या ज्जनाधिप ॥**

---

*என்றாவது சிலர் சில நாளாவது செய்வர்!*

வனத்தில் வஸித்தலை நியமமாகக் கொண்டவன் என்றதால் கிராமங்களில் தனக்குக் கிடைக்கும் எந்தப் பொருளையும் கருதாமல் இருப்பான்; அதாவது அவன் முன்பு கிராமத்தில் இருந்த நிலை இப்பொழுது அவனுக் கில்லை.

இவனைவிடச் சிறந்தவன் கிராமத்தில் வஸிக்கும் முனி; தான் இருந்த இடத்திலேயே வனவாஸிகளுடைய வழியைக் கைக்கொள்ளுகிறான். இவனுக்கு வனம் என்றும் கிராமமென்றும் ஸ்தானபேதமில்லை. வனம் போகவேண்டிய அவசியமும் இல்லை.

अनग्नि रनिकेतश्च अगोत्र चरणो मुनिः ।
कौपीनाच्छादनी चीरी सर्वस्वादु विवर्जितः ॥

இவனுக்கு அக்னி கார்யங்கள் எதுவும் இனித் தேவையில்லை. நிலைத்து ஓர் இடமும் இவனுக்கு இல்லை. தன் குலம், கோத்ரம், வம்சம் இவைகள் எதிலும் சம்பந்தம் இனி இவனுக்கில்லை. மறைவுக்குச் சிறியதோர் உடை, உயிர் பிழைக்க சிறிது ஆகாரம், இவைபோதுமானது. ஆசைகள் அனைத்தையும் சுட்டெரித்து, செயல்களிலிருந்து நீங்கி, புலனடக்கம் எனும் மௌன வ்ரதத்தைக்கொண்டிருக்கும் இம்முனிவனே முக்தனாகிறான்.

இனி, நான்கு ஆச்ரமவாஸிகளுக்கும் ஸமானமான தருமத்தைச் சொல்லுகிறேன்.

विहाय मत्सरं स्तैन्यं दर्पं दंभंच पैशुनं ।
मानं मदं ममत्वंच यस्य नास्ति स धर्मवित् ॥

குரோதமின்றி, எவர்க்கும் தீங்கு கருதாமல், களவு நீங்கி, தன்னகந்தை தவிர்த்து, பிறர் குற்றம் பேசும் கொடுங்குணமற்று, தன்னாசையும், அபிமானத்தையும் துறந்து, தன்னுடையது என்ற எண்ணமில்லாது வாழ்பவனே இவ்வுலகில் தருமம் அறிந்தவன். இதுவே யாவர்க்கும் ஸமானமான சாச்வத தர்மமாகும்.

---

*சிலரது செயலைக் கேட்க மனம் வேதனையடைகின்றது!*

பாப காரியங்களிடத்தில் எப்பொழுதும் ஒருவனுக்கு பயம் இருக்கவேண்டும். இந்த பயத்துடன் பாபச் செயல்களிலிருந்து தன்னை விலக்கிக் கொள்ள முற்பட வேண்டும். இதுவே பச்சாத்தாபமாகும். இந்த அனு தாபம் ஒருவனுக்கு ஏற்பட்டாலே, தவறுபண்ணிவிட்டா லும், மறுபடியும் நற்றவம் இயற்றிப் பிழைத்துக்கொள்ள முடியும்.

पापानां कर्मणां नित्यं बिभीयाद्यस्तु मानवः ।
सुखमप्याचरन्नित्यं सोऽत्यन्तं सुखमेधते ॥

எந்தக் காலத்திலும், பிறரை ஹிம்ஸிப்பதை நீக்க வேண்டும். ஹிம்ஸை செய்யாதிருத்தலே ஸத்யமாகும்.

*அஷ்டகன்:*—இவ்வளவு தர்ம ஸூக்ஷ்மங்கள் அறிந் துள்ள தாங்கள் ஏன் பூமியில் விழுந்துவிட்டீர்? என் பதை என்னால் யூகிக்க முடியவில்லை. ஏதோ ஒரு காரணமாகத்தான் பூமிக்கு வந்திருக்கிறீர்களோ? தங்கள் தேஜஸ்ஸோ குறையாமலிருக்கிறது. யாராவது தங்களை இங்கு விரும்பி அழைத்துள்ளார்களா? அல்லது தேவ லோக வாஸிகளின் திருவிளையாடலா? அப்படியெனில் எந்த இடம் போக விரும்பி வந்திருக்கிறீர்?

*யயாதி:*—யாரும் அழைக்கவும் இல்லை. என்னை யாரும் அனுப்பவும் இல்லை. என் தவறாலேயே விழுந்து கொண்டிருக்கிறேன். புண்ணிய சீலர்கள் உறைவிடத் தையே நாடி வந்து கொண்டிருக்கிறேன். புண்ணி யாத்மாக்களான உங்கள் நடுவில்தான் விழப்போகிறேன். இந்த சமயத்தில் தார்மீக விஷயமாக என்னிடம் பேசி, என்னை அந்த சக்தியாலும், உன் தவ வலிமையாலும் நிறுத்திவிட்டாய்.

*அஷ்:*—ஆ! அப்படியா, ரொம்ப நல்லது. நான் கேட்கிறவரையிலும் நீங்களும் விழமாட்டீர்கள். நானும் கேட்டுக்கொண்டே இருக்கிறேன். நீங்களும் சொல்லிக் கொண்டே இருங்கள். இருவருக்கும் நன்மை உண்டு.

(தொடரும்)

---

*ரிஷி வம்சம்! பிராம்மண குலம்! இப்படியா?*



# நவரஸம்.



" அக்ஷயபரணி "

## ஒட்டகமும் கல்லும்!

ஒட்டகம் பார்த்திருக்கிறீர்களா? பரம சாதுவான பிராணி அது! எத்தனை பாரத்தைத் தான் ஏற்றுகிறார்கள் அதன் மேல்! அதில் ஒரு வேடிக்கை, மூட்டைகளை ஏற்றும்போது கூடவே ஒரு பாராங்கல்லையும் ஏற்றுவார்கள்! கல்லை ஏற்றுவது ஒட்டகத்தை ஏமாற்றுவதற்காக! பாரம் ஏற, ஏற 'எப்படிச் சுமந்து செல்வோம்' என்று மலைக்குமாம் அந்த பிராணி! எல்லாவற்றையும் வைத்து விட்டுக்கிளம்பும் தறுவாயில் ஒட்டகத்தின் முதுகிலிருந்து திடீரென்று அந்தக் கல்லைக் கீழே போடுவார்கள். பாரத்தை எல்லாம் இறக்கியாய் விட்டது என்ற நினைப்பில் ஒரு குதி குதித்துக் கொண்டு ஓட ஆரம்பிக்கும் அந்த அப்பாவி ஜந்து!

சம்சார பாரத்தைத் தாங்கும் நமக்கும் அந்தப் பிராணிக்கும் ஒரே ஒரு வேற்றுமை! கல்லைத் தள்ளினதால் ஒட்டகம் ஏமாற்றமடைந்தது! நாமோ அதைத் தள்ளாததினால் ஏமாற்றமடைந்து வருகிறோம்! ஓயாத உணர்ச்சிகளின் உற்பத்தி ஸ்தானமான மனமெனும் ஒரு பெரிய சுமையைத் தள்ளவேண்டிய இடத்தில் தள்ளத் தெரியாமல் சுமந்துகொண்டு தவிக்கின்றோமல்லவா!

## அம்மி மிதித்து!

வாஸ்தவம்! தள்ள வேண்டிய இடமெது? இருட்டிற்கு வெளிச்சம்போல், பசிக்கு அன்னம்போல், பிணிக்கு மருந்துபோல் கல்மஷம் நிறைந்த நெஞ்சிற்கு நிஷ்களங்கமான தெய்வம் தான் புகலிடம். ஆமாம்! ஆனால் அப்படி அந்த மனதை தெய்வத்திடம் சேர்த்து விட்டுத் தூய்மை பெற விழையும் போது அந்த தெய்வத்திற்கு நாம் என்ன சமர்ப்பணம் செய்கிறோம்? ஒன்றுமில்லையே! அசுத்தமான மனதைத் தவிர நம்மிடம் என்ன இருக்கிறது கொடுப்பதற்கு! "இப்படியெல்லாம் கூச்சப்பட வேண்டாம்! கருணையின் வடிவமான அன்னையிடம் உள்ளதை உள்ளபடி கொண்டு சேர்த்து விடுவோம்! நம் மனம் கல்லோ, அல்லது புஷ்பம் போன்றதோ நாம்

---

என்னுடன் சேர்ந்து நீங்களும் வருந்தினால்

அறியோம். எப்படியிருப்பினும் அதைத் தாயார் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று பிரார்த்திப்போம்''! இப்படி நம்மை அம்பிகையின் திருவருளுக்கு அழைப்பவர் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் ஆவர்! ''**ஆனந்த ஸாகரஸ்தவம்**'' என்ற அவரது அற்புதமான கிரந்தத்தில் இந்த பாவத்தை என்ன அழகாகச் சொல்கிறார் பாருங்கள்!

**स्यात् कोमलं यदि मनो मम विश्वमात-**
**स्तत्पादयोर्मृदुलयोस्तव पादुकास्तु ।**
**स्यात् कर्कशं यदि करग्रहणे पुरारे-**
**रश्माधिरोहणविधौ भवतूपयोगः ॥**

ஸ்யாத் கோமலம் யதி மனோ மம விஶ்வமாத-
ஸ்தத் பாதயோர்ம்ருது லயோஸ்தவ பாதுகாஸ்து ।
ஸ்யாத் கர்கஶம் யதி கரக்ரஹணே புராரே-
ரஶ்மாதிரோஹணவிதௌ பவதூபயோக: ॥

ஏ ஜகன் மாதா! என் மனம் உன்னிடம் ஒப்படைக்கப் பட்டு விட்டதம்மா! அது மிருதுவாக இருக்குமோ, கடினமாக இருக்குமோ நான் அறியேன்! மிருதுவாகயிருந் தால், மிகவும் மென்மையான தங்கள் பாதங்களுக்கு என் மனதைப் பாதுகையாக ஏற்றுக்கொள்ளுங்கள்! அல்லா மல் கல்லைப்போல் கடினமாயிருந்தாலோ, தாயே! அதற் காகத் தள்ளிவிட வேண்டாம்! பரமேஸ்வரன் தங்களைப் பாணிக்ரஹணம் செய்து கொள்ளும் போது அம்மி மிதிக் கும் கட்டம் ஒன்று வருமல்லவா? கல் போன்ற என் மனதை அந்தக் காரியத்திற்காவது உபயோகப்படுத்திக் கொள்ளுங்கள்!

## கல்லும் கவியும்!

இத்தகைய பக்திப் பரவசமான ஸ்தோத்திரங்களை தீக்ஷிதர் அவர்கள் செய்வதற்குக் காரணமாயிருந்ததும் ஒரு கல் தான்! பதினேழாம் நூற்றாண்டில் மதுரை திருமலை நாயக்கர் என்ற அரசருக்கு அமைச்சராய்த் திகழ்ந்தவர் நீலகண்ட தீக்ஷிதர். மஹான் அப்பைய தீக்ஷிதரின் பரம் பரையில் தோன்றிய பெருமைக் கேற்ப, அபாரமான பாண்டித்தியமும், தவிர ராஜரீக விஷயங்களில் சிறந்த ஆற்றலும் கொண்ட தீக்ஷிதரிடம் பெருமதிப்புக் கொண் டிருந்தான் அரசன்.

---

மதுரையில் இப்பொழுதும் சிற்ப வேலைப்பாடுகளுடன் விளங்கி வரும் 'புது மண்டபத்தின்' கட்டிட வேலை நடந்து கொண்டிருந்தது. மதுரை நாயகர்களின் சிலைகளை அமைத்து வந்த சிற்பி, திருமலை நாயகரின் சிலையையும், அவர் பத்தினிகளின் சிலைகளையும் உருவாக்கிக் கொண்டிருந்தான். பட்ட மஹிஷியின் சிலையைச் செதுக்கும்போது, ஊரு பாகத்தில் ஒரு சிறிய பின்னம் ஏற்பட்டு விட்டது. மறுபடியும் அதைச் சரிப்படுத்த முயன்றும் பின்னம் மறையாமல் நின்றது கண்டு துயரடைந்தான் நிபுணனான அந்த சிற்பி. மேற்பார்வையிட அச்சமயம் அங்கு வந்த தீக்ஷிதர் அவர்கள் நிகழ்ந்ததைக் கேள்விப்பட்டார். "தெய்வீக அருள் நிறைந்தது உன் கலைத்திறன். அப்படியிருக்க, இந்தக் குறை ஏற்பட்டது ஏன்? நாமறியாத ஒரு காரணம் இருக்கத்தான் வேண்டும்! அதை அப்படியே விட்டுவிடு! பெரியதொரு மச்சம்போல் தோன்றுகிறது இந்த பின்னம்; ஸாமுத்ரிகா லக்ஷண ரீதியாக உத்தம ஸ்திரீகளுக்கு இயல்பானதுதான் இது" என்று சிற்பியிடம் சொல்லிச் சென்று விட்டார் தீக்ஷிதர்.

உடனேயே அரசன் புதுமண்டப வேலைகளைப் பார்வையிட வந்தான். குறிப்பிட்ட இடத்திற்கு வந்து உற்று நோக்கினான் தன் மனைவியின் சிலையை; கறுத்து விட்டது முகம்; கூப்பிட்டான் சிற்பியை; சிலையில் பின்னமேற்பட்டதைப் பற்றி விசாரித்தான். தீக்ஷிதர் அதைப்பற்றி என்ன சொன்னார் என்பதைக் கேள்விப்பட்டவுடன் அரசன் உள்ளத்தில் குழப்பம் ஏற்பட்டது. சாதுக்களின் மனதில் தோன்றுவது சத்தியந்தான் என்று கொள்வதற்குப் பதிலாக தீக்ஷிதரின் ஒழுக்கத்தையே சந்தேஹிக்க ஆரம்பித்தான் வேந்தன்.

குற்றமில்லா உள்ளம் கொண்ட அந்த மஹான் தேவீ பூஜையில் ஈடுபட்டிருக்கும்போது, தளபதியும், சேவகர்களும் அரசன் உடனே அவரை அழைப்பதாக வந்து சொன்னார்கள்! தன் வீட்டிற்கு ஆளனுப்பி, அதுவும் பூஜை வேளையில் அரசன் இதுவரை தன்னை இப்படி அழைத்ததில்லை என்பதைச் சிந்தித்துப் பார்க்கும்போது, அவ்வுத்தமரின் மனதில் 'விபரீதமிது' என்று தெரிந்து விட்டது. கற்பூர ஹாரத்தி செய்யும் சமயம் அது!

---

**நித்யம் சாப்பிடும் உணவில் அலக்ஷ்யமில்லை.**

மிகுந்த மன வெறுப்படைந்தவராய் எரியும் கற்பூரத்தைத் தனது இரு விழிகளிலும் ஏற்றிக் கொண்டார்! அடுத்த க்ஷணம் பார்வையிழந்தார். "என்னை அழைப்பதின் நோக்கத்தை நான் அம்பிகையின் சன்னிதியிலேயே நிறை வேற்றிக்கொண்டேன் என்று அரசனிடம் போய்ச் சொல்லும்" என்று ஆட்களை அனுப்பி விட்டார்! இதுகாறும் ராஜஸேவை செய்ததற்குப் பிராயச்சித்தம் செய்து கொண்டவர் போல் புறக்கண்களைத் தாமே வலிய இழந்து விட்டு அம்பிகையின் ஸ்வரூபத்தைத் திருமுடி முதல் திருவடி வரை தன் உள்ளத்திலே தியானித்துக்கொண்டு ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்தார்! அந்த வேகத்தில் பாய்ந்தோடிய கவிதா ப்ரவாஹம் தான் 'ஆனந்த ஸாகர ஸ்தவம்.' அம்பிகையை வர்ணிக்க, வர்ணிக்கச் சிறிது சிறிதாக இழந்த பார்வையை மீண்டும் பெற்று அன்னை மீனாக்ஷியை ப்ரத்யக்ஷமாய்க் கண்டார்!

அரசன் தவறை உணர்ந்தான். தீக்ஷிதரும் தான் இனி மேல் அடையவேண்டிய நிலையை உணர்ந்தார். பரம வைராக்கியத்துடன் உலகப் பற்றை ஒழித்துப் பாலா மடை என்ற தாமிர பரணி தீரத்தில் துறவறம் பூண்டு, சில காலம் அங்கு வசித்த பின்னர் தேவியின் திருவடி சேர்ந்தார்! அனுபவத்தால் அறிந்த உண்மைகளைத் தான் அவரது பல நூல்களின் மூலமாக நமக்கு அறிவுறுத்துகிறார் இந்த மஹா புருஷர்!

---

## தார்மிகச் செய்திகள்.

**ஸ்ரீ ஜகத்குரு** காஞ்சி காமகோடி பரமாசார்யாள் 28உ நசரத்பேட்டையில் நமது ஆசிரியர் முதலான தர்ம கைங்கர்யம் செய்வோருக்கு ஒரு உபதேசம் செய்து ஸ்ரீ பெரம்பத்தூர் புறப் பட்டார்கள்.

**பங்குனிமீ 7உ** அடையபலத்தில் ஸ்ரீ அப்பய்யதீக்ஷிதர் அமைத்த ஆலய கும்பாபிஷேகத்திற்கு ஸ்ரீ ஜகத்குரு விஜயம் செய்வார்கள்.

**ஸ்ரீ ராதாகல்யாண மஹோத்ஸவம்:** தஞ்சை மேல ராஜ வீதி ஸ்ரீ காசி விச்வநாதர் ஆலயத்தில் மாசிமீ 30உ (13—3—60) பானுவாரத்தன்று ஸ்ரீ பரமாசார்யாள் அனுக்ரஹத்தாலும் பக்தர்களின் ஒத்துழைப்பாலும் நடைபெறுகிற விபரத்தைபொதுஜனங்கள் அறியும்பொருட்டு பக்தர்கள் தெரிவித்துக் கொள்ளுகிறார்கள்.

---

**அன்னம் உடலைத்தான் வளர்க்கின்றது.**

# ஆயுஷ்காமீயம்.

வைத்தியப் பகுதி.

"ஸ்வஸ்தி ஸ்ரீ"

## ஆகாராதிகள்.

ஒவ்வொருவரும் இவ்வுலகில் ஜீவித்திருப்பதிலுள்ள அபிலாஷைக்கு **ஆயுஷ்காமீயம்** என்று பெயர். இதனுல் தான், தர்மம் (அறம்), அர்த்தம் (பொருள்), காமம் (இன்பம்), மோக்ஷம் (வீடு) என்பவைகளை சாதிக்க முடியும். இதையே திருமூலர் என்ற சித்தர் பின்வருமாறுகூறுகிருர்

உடம்பா ரழியிலுயிரா ரழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவுமாட்டார்
ருடம்பை வளர்க்கு முபாய மறிந்தே
யுடம்பை வளர்த்தே னுயிர்வளர்த்தேனே.

'நரம் வர்ஷசதாதபி: சதமானம்பவதி: பச்யேம சரத சதம்' முதலிய வாக்யங்களால், சாதாரணமாய் நமது பூர்ண ஆயுட்காலம் நூருண்டு எனலாம். அறுபதுவயது வாழ்ந்தாலே தீர்க்காயுஸ் என்பார்கள்.

தற்காலத்தில் அகால ம்ருத்யுவும் அற்பாயுளும் சகஜமாய் விட்டது. பிறக்கும் குழந்தைகளில் அநேகம் ஒரு வயது முடியும் முன்னமே இறந்து விடுகின்றன. சிலசிசுக்கள் ஐந்து வயதிற்குள் வயற்றில் கட்டிபோன்ற வியாதிகளால் வருந்தி, உயிர் நீக்குகின்றன. வாலிப வயதில் சந்நிபாத ஜுரம் (டைபாய்ட்), க்ஷயரோகம் (டியுபர்குலோஸிஸ்) முதலியவைகளினுல் அபாயங்கள் நேரிடுகின்றன. அதற்கு மேலும் ஆயுட்காலத்தை குறைக்க புதுபுது பலபல ரோகங்கள் உற்பத்தியாகின்றன. இவற்றினின்று தப்பித்து சரியான ஜீவதசையை யடைய வழிகள் யாவை? என்பதை ஒவ்வொருவரும் அறிந்துகொள்ளவேண்டியது அவசியம்.

வித்தைகளைக் கற்க குரு எப்படி முக்கியமோ, அப்படியே சரீரத்தை வியாதிகளினின்று பாதுகாக்க அநுபவம் வாய்ந்த வைத்யருதவி தேவை. அப்படிப்பட்டவர்களுக்குள் முதன்மையானவர் ஈச்வரன் தான் என்று நமது பெரியோர்கள் கருதுகிருர்கள். 'வைதீச்வரன்' 'வைத்யோ நாராயணே ஹரி:' முதலியவைகளைக் கவனிக்கவும். கண்ணுக்குப் புலப்படாத இத்தகைய அபூர்வ வைத்யர் எத்தகையோரெனில் பிரபல ஆயுர் வேத

---

க்ரந்த கர்த்தாவான வாக்படர், தன்னுடைய அஷ்டாங்க ஹ்ருதயம் என்ற நூலுக்கு எழுதியுள்ள மங்கள சுலோகத்தால் தெளிவாகத் தெரிவிக்கின்றார்.

**रागादिरोगान् सततानुषक्ता नशेषकाय प्रसृतान शेषान् ।**
**औत्सुक्यमोहारतिदान् जघान योपूर्ववैद्याय नमोस्तु तस्मै ॥**

ராகாதி ரோகான் ஸததாநுஷக்தாநசேஷகாய ப்ரஸ்ருதாந சேஷான் |
ஔத்ஸுக்யமோஹாரதிதான் ஜகாநயோ பூர்வவைத்யாய நமோஸ்து தஸ்மை.

ஆசை முதலிய வியாதிகள் சதாகாலமும் சரீரமெங்கும் ஆச்ரயித்துள்ளன. விஷயவிருப்பம், அறிவின்மை, ஆறுதலற்ற நிலை ஆகிய விகாரங்களை உண்டு பண்ணுகின்றன. இத்தகையவற்றை யாதொருவர் அடியோடு அழித்தனரோ, அவ்வபூர்வ வைத்தியரை வணங்குவேனாக. (அவருடைய குணங்கள் நமக்கும் ஏற்படும்படி ப்ராத்திப்போம்.)

தற்காலத்திலும், தங்கள் வாழ்நாள் முழுவதிலும் வைத்யரிடம் போகாது, மருந்து உட்கொள்ளாமலே ஆரோச்ய நிலையிலுள்ள பல பெருமக்களைப் பார்க்கலாம். உற்று கவனித்தால் இவர்களெல்லாம் வைதிக நெறியிலிருந்து கொண்டு ஐம்பொறிகளை யடக்கி மனதை சதா சாந்தத்துடன் வைத்துக்கொண்டு இருப்பது புலப்படும். இப்படி யிருப்பது யாவருக்கும் எளிதல்ல. ராகம் என்ற ஆசை மிகவும் சக்திவாய்ந்தது. அது மனதைப் பலதுறைகளில் இழுத்துக்கொண்டு போய் சரீரத்தில் ரோகங்களை உண்டு பண்ணுகின்றது. அவ்வித துரைகளை ரிஷிகள் ஆகார விஹாரங்களெனப் பிரித்து இருக்கிறார்கள். இவை அதி-ஹீன-மித்யா யோகங்களாகும்போது வியாதிகள் தோன்றும். அதாவது நாம் உட்கொள்ளும் அன்னபானாதிகளும் நமது கர்மேந்த்ரிய க்ஞானேந்த்ரிய அந்தகரண வியாபாரங்களும் அதிகமாகவோ மிகக் குறைந்ததாகவோ குற்ற முள்ளதாகவோ ஆகி விடின் ஆரோக்ய நிலை கெட்டு ஆயுட்காலம் குறுகி விடுகிறது. முதலில் ஆகாராதிகள் என்ற அன்னபானாதிகளின் தன்மையையும் அவற்றின் விகாரங்களையும் கவனிப்போம்.

அன்னம் பிராணன், அன்னம் அபாநன், அன்னம் ம்ருத்யு, அன்னம் பிரஜாயாம் என்ற வாக்கியங்களினால்

---

**உடல் அழிந்து அழிந்து பிறக்கும் அடிக்கடி.**

படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களும் அன்னத்தாலேயே ஏற்படுகின்றன என்பது புலப்படும். அந்தகைய அன்னம்-ப்ருதிவி-அப்பு-தேயு-வாயு-ஆகாயம் என்ற பஞ்சபூதமாயும் மதுர-அம்ல-லவண-கடு-திக்த-கஷாயம் என்ற ஷட்ரஸங்கள் கொண்டதாயும் ஸத்வம்-ரஜஸ்-தமஸ்-என்ற திரிகுணங்களை உண்டாக்குகிறதாயும் இருக்கிறது. முதலில் அன்னத்திதின் பஞ்சபூதத் தன்மையைக் கவனிப்போம்.

எல்லா திரவியங்களும் பிருதிவி பூதத்தை ஆதாரமாகக் கொண்டுள்ளது. அது ஒருவாறு பரிணமமடைவதற்கு அப் என்னும் பூதம் காரணமாயிருக்கின்றது. இவ்விரண்டுடன் தேஜஸ்-வாயு-ஆகாயம் சேர்ந்து உருவபேதங்களையும் குண விசேஷங்களையும் அடையச் செய்கின்றன. ஒவ்வொரு வஸ்துவிலும் பஞ்சபூதங்களுமிருந்தாலும், ஒவ்வொன்றில் ஒரு பூதம் அதிகரித்து அப்பூதத்தின் குண விசேஷங்களை வெளிப்படுத்துகின்றது.

*(1) **பார்த்திவ திரவியம்:*** குரு-ஸ்தூலம்-ஸ்த்திரம்-கந்தம் என்ற குணங்களையுடையது. தேகத்தில் திரட்சியையும் வளர்ச்சியையும் உண்டுபண்ணும். **(2) ஆப்யத் திரவியம்:** திரவம்-சீதம்-குரு-ஸ்நிக்தம்-மந்தம்-ஸாந்த்ரம் (தோயுந்தன்மை)-சுவை என்ற குணங்களையுடையது. ஸ்நேஹனம் (எண்ணைப்பசையை உண்டாக்கல்)-விஷ்யந்தம் (பெருகும் தன்மை)-கிலேதனம் (கடின பதார்த்தங்கள் ஊறி மெதுவாதல்)-ஹ்லாதனம் (மனக்களிப்பு)-பந்தனம் (ஒன்று சேர்த்தல்) ஆகிய காரியங்களை உண்டுபண்ணும். **(3) ஆக்நேய (தேயு) திரவியம்:** ரூக்ஷம்-திக்ஷ்ணம்-உஷ்ணம்-விசதம் (தெளிவு) -ஸூக்ஷ்மம்-ரூபம் என்ற குணங்களுடையது. எரித்தல்-ஒளி உண்டாக்குதல்-நிறம் தருதல்-பிரகாசமாயிருத்தல்,பசனம் ஆகிய காரியங்களைச் செய்யும். **(4) வாயவ்ய திரவியம்:** ரூக்ஷம்-விசதம்-இலகு-பரிசம் ஆகிய குணங்களைக் கொண்டது. வறட்சியுண்டாக்கல்-இலகுவாக்கல்-தெளிவாகச்செய்தல் மனக்கவலை ஏற்படுத்தல்-உடல் வாட்டம்தருதல் ஆகிய காரியங்களைச் செய்யும். **(5) நாபஸ (ஆகாய) திரவியம்:** ஸூக்ஷ்மம்-விசதம்-இலகு-சப்தம் ஆகிய குணங்களைக் கொண்டது. இடைவெளியமைத்தல்-இலகுவாக்கல் ஆகிய காரியங்களைச் செய்யும்.

---

ஆகாராதிகளை உட்கொள்ள அவாவை உண்டுபண்ணுவதும், சமையல் கலையில் 'நளபாகம்' 'பீமபாகம்' போன்ற பெயர்களுக்குக் காரணமாயிருப்பதும் ஷட்ரஸம் என்ற அறுசுவை வேருபாடுகளே. ஒவ்வொரு ரஸமும் பஞ்ச பூதங்களுள், சிலவற்றின் சேர்க்கையால் ஆக்கப்படுகிறது. பிருதிவியும் அப்புவும் மதுரத்திற்கும், பிருதிவியும் அக்நியும் அமலத்திற்கும், பிருதிவியும் வாயுவும் கஷாயத்திற்கும், அப்புவும் அக்னியும் இலவணத்திற்கும், அக்நியும் வாயுவும் கடுவிற்கும், வாயுவும் ஆகாயமும் திக்தத்திற்கும் காரணமாகின்றன. அறு சுவைகளின் திரவியங்களையும் குணங்களையும் செய்கைகளையும் கவனிப்போம்.

**மதுர திரவிய வர்க்கம்:** தேன், வெல்லம், பழங்கள், பால், நெய் முதலியன. இவை தேகத்திற்கு இன்பத்தைத் தரும். புலன்களின் தெளிவை உண்டாக்கும். எல்லோருக்கும் பிரியமும் ஸாத்விகமுமானது. தேகநிறம், தலைமயிர், ஓஜஸ் இவைகளைச் செம்மையாக்கும். உடம்பின் புஷ்டியையும் ஸ்நிக்தத் தன்மையையும் விருத்திசெய்யும். கண்டத்திற்கு நல்லது. ஆயுள் அதிகரிக்கும். சீத வீரியம் வாத பித்தஹரம்.

**அம்ல திரவிய வர்க்கம்:** புளி, எலும்மிச்சம்பழம், மாங்காய், நெல்லிக்காய் தயிர் முதலியன. அன்னத்தை ஜீரணம் செய்யும். வாயை நிர்மல மாக்கும். உடலில் ஸ்நேகத்தை ஏற்படுத்தும். மலம் நன்ருக வெளிவரும். அளவாய் உட்கொள்ள வேண்டும். மீறினல் பித்தமும் கபமும் பிரகோபிக்கும். உஷ்ணவீர்யம் வாதஹரம்.

**இலவண திரவிய வர்க்கம்:** சோத்துப்பு, கீரைகள், பச்சை காய்கள் முதலியன. வாயில் ருசியை உண்டாக்கும். தேகத்தில் ஸ்நிக்தத்தை உண்டாக்கி, ஸ்ரோதஸ்ஸுகளை விரியச்செய்து, மலம்-மூத்திரம்-வியர்வை முதலிய கழிவுப் பொருள்களைச் சரிவர வெளிப்படுத்தும். உஷ்ண வீரியம், வாதஹரம்.

**திக்த திரவிய வர்க்கம்:** பாகக்காய், மஞ்சள் முதலியன. கைப்புச்சுவை அரோசகமாயிருந்தாலும், தேகத்திலுள்ள அரோசகத்தைப் போக்கும். கண்டத்தைச் சுத்தம் செய்யும். சீத வீர்யம், பித்தகபஹரம்.

---

**இப்பிறவியில் செய்யும் தர்மம் மறு பிறவிக்குமுதவும்.**

# ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்.

8. उन्मील्य नेत्रयुगमुत्तम पञ्जरस्थाः
पात्रावशिष्ट कदलीफल पायसानि ।
भुक्त्वा सलीलमथ केलिशुकाः पठन्ति
शेषाद्रि शेखरविभो तवसुप्रभातम् ॥

*உந்மில்ய நேத்ரயுகமுத்தம பஞ்சரஸ்தா:*
*பாத்ராவஶிஷ்ட கதலீபல பாயஸாநி ।*
*புக்த்வா ஸலீலமதகேளிஶுகா: படந்தி*
*ஶேஷாத்ரிஶேகரவிபோ தவஸுப்ரபாதம் ॥*

**अथ** *அத*-பிறகு **उत्तमपञ्जरस्थाः** *உத்தமபஞ்சரஸ்தா:*-உயர்ந்த கூண்டுகளில் இருக்கின்ற **केलिशुकाः** *கேளிஶுகா:* விளையாட்டுக் கிளிகள் **नेत्रयुगम्** *நேத்ரயுகம்*-இருகண்களையும் **उन्मील्य** *உந்மீல்ய*-திறந்து **पात्रावशिष्टकदलीफलपायसानि** *பாத்ராவஶிஷ்ட கதலீபல பாயஸாநி*-கலங்களில் மிச்சமுள்ள வாழைப்பழம் பாயஸம் ஆகியவைகளை **भुक्त्वा** *புக்த்வா* - புசித்து **सलीलं** *ஸலீலம்* - களிப்புடன் **पठन्ति** *படந்தி*-கற்கின்றன **शेषाद्रिशेखरविभो** *ஶேஷாத்ரி ஶேகர விபோ*-ஶேஷாசலவாசியே **तवसुप्रभातम्** *தவஸுப்ரபாதம்*-உனக்கு நல்ல காலை ஆகுக.

9. तन्त्री प्रकर्षमधुरस्वनया विपञ्चया
गायत्यनन्त चरितम् तव नारदोऽपि ।
भाषासमग्रमसकृत्करचार रम्यं
शेषाद्रिशेखरविभो तवसुप्रभातम् ॥

*தந்த்ரீ ப்ரகர்ஷமதுரஸ்வநயா விபஞ்ச்யா*
*காயத்யனந்த சரிதம் தவ நாரதோபி ।*

---

முற்பிறவியில் ஸந்த்யை செய்தவரே மறு பிறவியில்

பாஷாஸமக்ரமஸக்ருத்கரசார ரம்யம்
ஶேஷாத்ரி ஶேகரவிபோ தவஸுப்ரபாதம் ॥

**अनन्त** அனந்த - அழிவற்றவனே! **नारदोऽपि** நாரதோபி-நாரதரும் **तन्त्रीप्रकर्षमधुरस्वनया** தந்த்ரீப்ரகர்ஷ மதுரஸ்வனயா - சிறந்தகம்பிகளால் இனியநாதமுடைய **विपञ्च्या** விபஞ்ச்யா-வீணையுடன் **असकृत्** அஸக்ருத்-அடிக்கடி **करचाररम्यं** கரசாரரம்யம்-கைகள் ஸஞ்சரித்து இனிதாய் இருக்கும் வண்ணம் **भाषासमग्रं** பாஷாஸமக்ரம்-பாஷை பூர்த்தியாகும்படி **तव** தவ-உன்னுடைய **चरितम्** சரிதம்-சரிதத்தை **गायति** காயதி-பாடுகிறார் **शेषाद्रिशेखर-विभो तवसुप्रभातम्** சேஷாத்ரிஶேகரவிபோதவஸுப்ரபாதம் (முன்போலவே பொருள்.)

10. **भृङ्गावली च मकरन्दरसानुविद्ध**
**झङ्कारगीतनि नदैस्सहसेवनाय ।**
**निर्यात्युपान्त सरसीकमलोदरेभ्यः**
**शेषाद्रिशेखरविभो तवसुप्रभातम् ॥**

ப்ருங்காவலீச மகரந்தரஸா நுவித்த
ஜங்காரகீதநி நதைஸ்ஸஹஸேவநாய ।
நிர்யாத்யுபாந்த ஸரஸீகமலோதரேப்ய:
ஶேஷாத்ரி ஶேகரவிபோ தவஸுப்ரபாதம் ॥

**उपान्तसरसीकमलोदरेभ्यः** உபாந்தஸரஸீகமலோதரேப்ய:-அருகிலுள்ள தாமரைமலர்களின் நடுவிலிருந்து **भृङ्गावलीच** ப்ருங்காவலீச-வண்டுகள் **मकरन्दरसानुविद्ध** மகரந்தரஸா நுவித்த-தேன்குழம்பு கலந்துள்ள **झङ्कारगीतनिनदैः सह** ஜங்காரகீதநிநதை: ஸஹ - ரீங்காரங்களாகிய பாட்டின் நாதத்தோடு **सेवनाय** ஸேவநாய-தொழுவதற்காக **निर्याति** நிர்யாதி -வெளிவருகின்றது **शेषाद्रिशेखरविभो तवसुप्रभातम्** சேஷாத்ரிஶேகரவிபோ தவஸுப்ரபாதம் (முன்போலவே பொருள்.)

---

**நோயற்று ஏழ்மையின்றி சுகமாக வாழ்வார்.**

11. योषागणेन वरदध्नि विमथ्यमाने
घोषालयेषु दधिमन्थन तीव्रघोषाः ।
रोषात्कलिं विदधतेककुभश्च कुम्भाः
शेषाद्रि शेखरविभो तवसुप्रभातम् ॥

யோஷாகணேந வரதத்நி விமத்யமானே
கோஷாலயேஷு ததிமந்தன தீவ்ரகோஷா: ।
ரோஷாத்கலிம் விததேதேககுபஸ்ச கும்பா:
ஶேஷாத்ரி ஶேகரவிபோ தவஸுப்ரபாதம் ॥

**घोषालयेषु** கோஷாலயேஷு - யாதவர் வீடுகளில் **योषागणेन** யோஷாகணேந - ஸ்த்ரீ கூட்டத்தினுல் **वरदध्नि** வரதத்நி-உயர்ந்த தயிர் **विमथ्यमाने** விமத்யமானே-கடைய ப்படும் போது **कुम्भाः** கும்பா: -பானைகள் **दधिमन्थनतीव्रघोषाः** ததிமந்தன தீவ்ரகோஷா: - தயிர்க்கடைதலால் உண்டான உரத்த ஒலி உடையவைகளாக **सन्ति** ஸந்தி - இருக்கின்றன. **ककुभश्च** ககுபஸ்ச - திசைகளும் **रोषात्** ரோஷாத்-கோபத்தால் **कलिं** கலிம் - எதிர்ஒலியை **विदधते** விததேதே-செய்கின்றன. **शेषाद्रिशेखरविभो तवसुप्रभातम्** ஶேஷாத்ரி சேகரவிபோ தவஸுப்ரபாதம் (முன்போலவே பொருள்.)

12. पद्मेश मित्र शतपत्र गतालिवर्गाः
हर्तुं श्रियं कुवलयस्य निजाङ्गलक्ष्म्या ।
भेरीनिनादमिव बिभ्रति तीव्रनादं
शेषाद्रि शेखरविभो तवसुप्रभातम् ॥

பத்மேஶ மித்ர ஶதபத்ர கதாலிவர்கா:
ஹர்தும் ஶ்ரியம் குவலயஸ்ய நிஜாங்கலக்ஷ்ம்யா ।
பேரீ நிநாதமிவ பிப்ரதி தீவ்ரநாதம்
ஶேஷாத்ரி ஶேகரவிபோ தவஸுப்ரபாதம் ॥

**पद्मेश मित्र शतपत्रगथालिवर्गाः** பத்மேஶ மித்ர ஶதபத்ர கதாலிவர்கா: - சூர்யனுக்குத் தோழிகளான தாமரைகளை

---

ஸந்த்யையில் ஸகல தேவர்களும் களிக்கின்றனர்.

அண்டியுள்ள வண்டுகள் **निजाङ्गलक्ष्म्या** நிஜாங்க லக்ஷ்ம்யா-தங்கள் அவயவங்களுடைய அழகால் **कुवलयस्य** குவலயஸ்ய - கறு நெய்தல் பூக்களின் **श्रियं** ச்ரியம் - அழகை **हर्तुं** ஹர்தும் - போக்குவதற்காக **तीव्रनादम्** திவ்ரநாதம் - உரத்த ரீங்கார சப்தமாகிற **भेरीनिनादम्** பேரீநிநாதம் - முரசு ஒலியை **विडम्बयन्ति** ப்ரதிவ - செய்கின்றனபோலும் **शेषाद्रिशेखरविभो तवसुप्रभातम्** சேஷாத்ரி சேகரவிபோ தவஸுப்ரபாதம் (முன்போலவே பொருள்.)

13. **श्रीमन्नभीष्ट वरदाखिललोकबन्धो**
**श्री श्रीनिवास जगदेक दयैकसिन्धो ।**
**श्रीदेवतागृह भुजान्तर दिव्यमूर्ते**
**श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥**

ஸ்ரீமந்நபீஷ்ட வரதாகிலலோகபந்தோ
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ ஜகதேக தயைகஸிந்தோ ।
ஸ்ரீதேவதாக்ருஹ புஜாந்தர திவ்யமூர்த்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ॥

**श्रीमन्** ஸ்ரீமந்-திருமகள் நாதனே **अभीष्टवरद** அபீஷ்ட வரத-விரும்பியவரங்களை அளிப்பவனே **अखिललोकबन्धो**- அகில லோகபந்தோ-எல்லா உலகங்களுக்கும் பந்துவாக இருப்பவனே **श्री श्रीनिवास** ஸ்ரீ ஸ்ரீனிவாஸ - மேன்மை பொருந்திய ஸ்ரீனிவாஸப்பெருமானே **जगदेकदयैकसिन्धो** ஜகதேகதயைகஸிந்தோ - உலகங்களில் ஒப்பற்றுவிளங்கும் சிறியக் கருணைக்கடலே **श्रीदेवता** ஸ்ரீ தேவதா - லக்ஷ்மீ தேவிக்கு **गृह** க்ருஹ-இருப்பிடமாயமைந்த **भुजान्तर** புஜாந்தர-தோள் நடுவோடுகூடிய **दिव्यमूर्ते** திவ்யமூர்த்தே-அழகிய உடலுள்ளவனே **श्रीवेङ्कटाचलपते** ஸ்ரீ வேங்கடாசலபதே-திருவேங்கடமலைக்கு தலைவனே **तवसुप्रभातम्** தவ ஸுப்ரபாதம்-உனக்கு நற்பொழுது புலருக.

---

ஸகல பாக்யத்தையும் தருகின்றனர்.

## கிரஹ பலன்.

தியாகோப நிஷத்.

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்

*[எல்லோருடைய கவனத்தையும் எளிதில் கவரக்கூடிய யோசனை ஒன்று வெகு காலத்திற்கு முன்பு ஒருவர் சொன்னாராம். "கொஞ்சமாவது ஜோஸ்யம் சொல்லக் கற்றுக்கொள். உன்னைப் பத்துபேர் எப்பொழுதும் சுற்றிக்கொண்டேயிருப்பர்" என்றாராம் அவர். ஜோதிஷம் எல்லோரையும் மயக்குகிறது. நம்பிக்கை இல்லை என்று சொல்லிக்கொண்டிருப்பவன் கூட ஒரு சமயம் அதற்குத் தலை அசைக்கவேண்டியவனாகிறான். பௌதீக அறிவு முதிர்ந்த நாகரீக மேல் நாடுகளில்தான் நம்மைவிட அதிக ஜோதிடப் பித்து இருக்கிறது என்கிறார்கள்.*

*இது விஷயமாக ஜோதிஷ சாஸ்திர வித்பன்னரான மஹான் தியாகராஜஸ்வாமிகளின் வாக்யம் என்ன என்பதைப் பார்ப்போம்.]*

ராகம்–ரேவகுப்தி] [தாளம்–தேசாதி

பல்லவி.

க்ரஹ பலமேமி ஸ்ரீ ராமா னுக்ரஹ பலமே பலமு— (க்ர)

அனுபல்லவி.

க்ரஹ பலமேமி தேஜோ மயவி
க்ரஹமுனு த்யானிம்சு வாரிகி நவ— (க்ர)

சரணம்.

க்ரஹபீடல பஞ்ச பாபமுல நா
க்ரஹமுலு கல காமாதி ரிபுல நி
க்ரஹமு ஜேயு ஹரிநி பஜிம்சு
த்யாக ராஜுனிகி ரஸிகாக் ரேஸருலகு— (க்ர)

**பொருள்:—**

*பல்லவி:* நவக்ரஹங்களின் பலனைத் தெரிந்துகொள்வதனால் என்ன பயன் அடையப் போகிறாய்? (வருவது வந்தே தீரும்). ஸ்ரீ ராமனுடைய அனுக்ரஹத்தைப் பெறுவதையே நல்ல பலனாக நினை.

***அனுபல்லவி:*** ஒளி மிகுந்த திவ்ய ஸ்வரூபனை ஸ்ரீ ராமமூர்த்தியை இடைவிடாமல் தியானம் செய்கிற

---

**நாம் நன்றாக வாழ வழி தேட வேண்டாமா?**

வர்கள் நவக்ரஹங்களைப் பற்றியும் அவைகளின் பலா பலன்களைப்பற்றியும் எண்ணுவார்களோ?

**சாரணம்:** உன்னிடத்தில் உள்ள, காமம் க்ரோதம் போன்ற ஆறு பகைவர்கள் உன்னைத் தூண்டி, பாபச் செயல்கள், பலவற்றிலும் உன்னைப் புகுத்தி வேதனை அடையச் செய்கின்றனர். இதைவிடப் பெரிதல்ல கிர ஹங்களாலுண்டாகும் வேதனைகள். ஸ்ரீ ராமனை என்றும் நினைத்திருப்பவர்களுக்கு, இந்த ஆறு பகைவர்களின் சேஷ்டை ஒடுங்கிப்போகாதோ? இந்த மேலான வழி யையே (ஜோதிஷ சாஸ்திரம் நன்கு கற்றுத் தெளிந்த) இந்த தியாகராஜன் அறிந்து கொண்டேன். என்னைப் போல் பகவானை பக்தியுடன் பஜிப்பவர்களும் இதைத் தெரிந்துகொண்டுள்ளார்கள். இவர்களுக்கு நவக்ரஹங் களின் பலாபலன்களைப் பற்றித் தெரிந்து என்ன ஆக வேண்டும்.

**கருத்து:** நவக்ரஹங்கள் பகவானுடைய ஆணைக்குட் பட்டே ஸஞ்சரிக்கின்றன. தங்களுடைய கதிகளால் அதற் குட்பட்ட ஜீவராசிகளுக்கு ஸுக துக்கத்தை பலவழிகளில் உண்டாக்குகின்றன. பகவானையே தியானம் செய்து அவருடைய கிருபையைப் பெற்றவனை, இவைகள் என்ன செய்யும்?

கிரஹ பலன்களைத் தெரிந்துகொண்டு அதன்படி புத்தியைச் செலுத்துவது பொதுவான காரியம். பகவா னையே நம்பி அவனிடத்தில் அசையாத நம்பிக்கையும் பக்தியும் கொண்டிருப்பது சிறந்த காரியம்.

மேலும் பகவத்யானத்தில் மூழ்கியிருப்பவன் ஞானி யின் நிலையை விரைவில் அடைகிறான். அந்த நிலையில் அவன் காமாதி சத்ருக்களை வென்றவன். காம க்ரோ தங்கள்தான் உலகில் ஒருவனுடைய இன்பதுன்பத்திற்குக் காரணம். அதையே அவன் புறக்கணித்துவிட்டு, பகவத் ஸேவையையே பெரிதெனக் கொண்டிருப்பதால், உலகில் இன்ப துன்பங்களைக் காட்டும் நவக்ரஹங்கள் எது செய் தாலென்ன? செய்யாமல் விட்டால் என்ன? இதனால் அந்த பக்தனுக்கு ஆவதொன்றும் இல்லை அல்லவா!

---

# ஜோதிஷ தத்வம்.

(By E. S. K. Swamy)

நேத்திராங்கமான ஜோதிஷக் கலை ஸர்வேச்வரனுடைய பிரதான அங்கமாகும். ஜோதிஷக் கலை இல்லையென்றால் மற்ற எந்த கலைகளுக்கும் ஜீவத்வம் கிடையாது. மற்ற கலைகள் யாவும் இருக்கலாம்; இல்லாமலுமிருக்கலாம். ஆனால் ஜோதிஷக்கலை இல்லையென்றால் ஈசுவரனுமில்லையென்பதுதான் பொருளாகும். மத்தியில் சென்ற சில வருஷகாலங்களாய் ஜோதிஷக் கலைக்கு வியாதி ஏற்பட்டு மங்கிப்போயிருந்தது என்றாலும் தற்சமயம் ஜோதிஷம் ஜீவத்வம் பெற்று எங்கிலும் பரவி வருகிறது. பெரும்பான்மையான மக்கள் இந்தக் கலையில் ஆர்வங்கொண்டு பலாபலன்களைக் கேட்டறிய முற்பட்டிருப்பதைக் கொண்டே இப்போது சில வருஷங்காளாய் விட்டுக்குவிடு ஜோதிஷக் கலையைக் கற்றுவர முற்பட்டிருக்கிறார்கள். இதனாலேயே ஜோதிஷ அரிச்சுவடியைப் படித்த எண்ணிறந்த ஜோதிஷர்கள் இக்காலத்தில் பெருக்கடைந்து வருகின்றனர்.

ஜோதிஷம் என்பது காலஞானம். அணுவுக்கு அணுவாக கால நுட்பங்களை அறிந்து அவற்றிற்கேற்ற பலாபலன்களைத் தீர்க்க திருஷ்டியாலறிந்த மகரிஷிகளால் அறிவிக்கப்பட்டதாகும். ஒரு சிலர் மௌட்டீகமாய் எனக்கு ஜோதிஷத்தில் நம்பிக்கையில்லை ஸார், ஆனால் பஞ்சாங்கத்தில் நம்பிக்கையுண்டு. கர்மாக்களைச்செய்ய திதி வார நக்ஷத்திர யோகங்கள் அவசியமானவை; என்று கூறிவருகிறார்கள். அப்படிப்பட்ட நபர்கள் "காலே அரைக்கால் ரூபாயில் தனக்கு நம்பிக்கை கிடையாது, ஆறணாவில்தான் தங்களுக்கு நம்பிக்கை உண்டு" என்று கூறுவதைப் போலிருக்கிறது. தன்னைப் பெற்று வளர்த்த தாய் தந்தை இருவர்களில் தகப்பனாரைப்பற்றி சந்தேகப்பட்டாலும் படலாம். ஆனால் தாய் வேறில்லை என்கிறது எவ்வளவு உறுதியோ, அவ்வளவு உறுதியுள்ளது ஜோதிஷமாகும். ஜோதிஷத்தில் நம்பிக்கையில்லை என்று சொல்பவர்களெல்லாம் "என் தாய் மலடி" என்று சொல்லிக்கொள்பவர்களே யாவர்.

ஆகையால் இயன்றளவில் திதி வார நக்ஷத்திரப்பலன்களையாவது அறிந்துகொள்ளும் விஷயத்தில் பிரதி நபர்களும் பஞ்சாங்கம் பார்க்கும் பழக்கத்தையாவது பெற்றிருக்கவேண்டியது அத்யாவசியமாகும். மக்களில் சிலர் பிரதி வருஷமும் வெளியாகக்கூடிய கணக்கற்ற பஞ்சாங்கங்களில் ஒன்றை வாங்கி வீட்டில் வைக்கிறார்களே தவிர மீண்டும் ஒரு நாள் நக்ஷத்திரம் பார்க்கக் கூட பஞ்சாங்கத்தை எடுப்பதில்லை. முக்கியமாக மாதப்பிறப்போ, அமாவாசையோ தெரிந்துகொள்ள வேண்டுமானால் புரோகிதர் சொன்னால்தான் அவர்களுக்குத் தெரிகிறது. புரோகிதர்களிலும் ஒருவர் ஒருபஞ்சாங்கப்படி செவ்வாய்க்கிழமைதான் அமாவாசை என்று சொல்லிப்போகிறார். மற்றொரு புரோகிதர் வேறொரு பஞ்சாங்கத்தைக்கொண்டு புதன்கிழமைதான் அமாவாசை என்று சொல்லிப்போகிறார். இவ்வித வித்தியாசத்தில் என்றைக்குத்தான் அமாவாசை என்று தனக்கும் பார்க்கத் தெரியாத சில பெரிய மனுஷ்யர்கள் ஏதாவது ஒரு தடிப்பான அபிமானத்திலிறங்கி கர்மாவை முடிக்கிறார்கள். இப்படியெல்லாம் அடிப்படையான பஞ்சாங்கத்தைத் தெரிந்துகொள்ளாதவர்களுக்கு ஜோதிஷத்தில் நம்பிக்கை எப்படி ஏற்படும்? கரைகடந்து படித்த மேதாவிகளே பெரும்பாலோர் இம்மாதிரி நடந்துகொள்வதைப் பார்த்துவருகிறோம்.

ஆகையால் பொதுவாக ஒவ்வொருவரும் தன் குடும்ப அலுவல்களைக் காலமறிந்து நடத்த பஞ்சாங்கம் பார்க்கக் கற்றுக்கொண்டாலே போதுமானது. அவர்கள் ஜோதிஷமே கற்றுக்கொள்ளத் தேவையில்லை. முதலாவது பஞ்சாங்கமென்பது என்ன? பார்க்கவேண்டிய விதம் எப்படி? பிரதி வருஷமும் வருஷப்பிறப்பன்று பஞ்சாங்க சிரவணம் செய்வதின் பயனென்ன? அதை ஏன் நடத்துகிறார்கள்? என்பவைபோன்ற சில முக்கிய அம்சங்களைத் தெரிந்து

---

***ஸந்த்யையை விட்டவர் மறு பிறவியில் நாயாவர்.***

கொண்டால் தெய்விக ஸம்பத்துக்கு ஆளாக நேரும். இந்த அளவிலாவது ஜனங்கள் பூராவும் தெரிந்துகொண்டால்தான் உலகில் ஜனித்ததற்குப் பயனாகும். மற்ற கிரஹ பலன்களைக் கற்றுக்கொள்ள முடியாவிட்டாலும், நக்ஷத்திரங்களையும், திதிகளையுமாவது அறிந்துகொள்ள வேண்டாமா ?

ஆதலால் மேற்கூறியவைகளை அடிப்படையிலிருந்து இனி பிரதி ஸஞ்சிகையிலும் தொடர்பாக வெளிப்படுத்திவர பிர்ம்மஸ்ரீ ஆசிரியர் அவர்கள் கேட்டுக்கொண்டபடி இனி அடுத்த ஸஞ்சிகையிலிருந்து எழுதிவர உத்தேசித்துள்ளேன்.

(தொடரும்)

---

# PRESS & REGISTRATION OF BOOKS ACT

## *Registration of Newspapers (Central) Rules 1956.*

## FORM IV (SEE RULE 8)

*Statement about ownership & other particulars about "VAIDHIKA DHARMA VARDHINI"*

1. *Place of Publication* ... Kadavasal, Vadagal (Post), (Via) Sirkali, Tanjore Dt.
2. *Periodicity of its Publication* ... Monthly
3. *Printers Name* ... A. Venkataraman
   *Nationality* ... Indian
   *Address* ... Kadavasal, Vadagal (Po.), (Via) Sirkali, Tanjore Dt.
4. *Publisher's Name* ... A. Venkataraman
   *Nationality* ... Indian
   *Address* ... Kadavasal, Vadagal (Po.), (Via) Sirkali, Tanjore Dt.
5. *Editor's Name* ... Sri V. Somadeva Sarma,
   *Nationality* ... Indian
   *Address* ... No. 2, Station Road, West Mambalam, Madras-17.
6. *Names & addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital.* Partners: Sri V. Somadeva Sarma, No. 2, Station Road, West Mambalam, Madras-17. A. Venkataraman, Kadavasal, Vadagal (Po.), (Via) Sirkali, Tanjore Dt.

I, A. VENKATARAMAN, *hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

*Dated, 1-3-60. Signature of Publisher* : (*Sd.*) A. VENKATARAMAN.

---

ஸூர்யனைக் கொன்ற பாபியாவர் என சாஸ்த்ரம்.

# கல்கி புராணம்.

ஶஶித்வஜன் ஸுஶாந்தையிடம் வேதாந்த மொழிகளைக் கூறிவிட்டு ஸேனையுடன் பகவானை கல்கியோடு யுத்தம் செய்யக் கிளம்பினான். ஸுஶாந்தையை கமலாபதியான பகவானைப் பூஜைசெய் என்று கூற வேதாந்த மொழிகளைக்கேட்டு ஸுஶாந்தை கூறினாள். விஷ்ணு ஸேவையில் ஈடுபட்ட தங்களால் க்ருதார்த்தையாக ஆனேன். ஸ்வாமின்! தாங்கள் கூறியபடி செய்கிறேன். இங்கும் அங்கும் விஷ்ணு ஸம்மந்தமான கதி எனக்குக் கிடைக்கும். இங்ஙனம் மனைவி சொல்லைக்கேட்டு அரசன் பகவானை நினைத்துத் தானும் பத்னியும் விஷ்ணு பக்தர்களாக இருப்பதை எண்ணி கண்ணீர் பெருக்கி ஆனந்தமடைந்தான். மனைவியைக்கட்டி அணைத்து ஸந்தோஷமாக பல சூரர்கள் சூழ பகவானது நாமாவைக்கூறி பகவத் ஸ்வரூபத்தை நினைத்து யுத்தம் செய்யக் கிளம்பினான். ஶய்யா கர்ணி என்ற கணங்களுடன் கூடி கல்கி அவன் ஸேனையுடன் போர்புரிந்தார். எதிரியின் ஸைநிகர் பயந்து மூலைக்கொருவராக ஓடும்படி விரட்டினார் கல்கி.

மஹாபலிஷ்டனை ஶஶித்வஜனின் மைந்தன் ஸூர்யகேது மருராஜனோடு போர் புரிந்தான். அவனது தம்பி பேசுவதில் குயில் போன்றவனும் வெகு அழகுள்ளவனுமான ப்ருஹத்கேது என்பவன், தேவாபியோடு போர் புரிந்தான். விஶாகயூபன் ஶஶித்வஜ ராஜனுடன்சேர்ந்து யுத்தம் செய்தான். ப்ரதாபவான் பர்க்கனுடன் யுத்தம் செய்தான். சூலம் ப்ராஸம் கதை பாணம் ஶக்தி ரிஷ்டி தோமரம் பல்லம் கத்தி புசுண்டம் குந்தம் முதலிய ஆயுதங்களாலும் கொடிகளாலும் சத்ர சாமரங்களாலும் ரணகளத்தில் கிளம்பிய தூளிகளாலும் எங்கும் ஒரே இருள் சூழ்ந்திருந்தது. ஆகாயத்தில் தேவர்கள் விமானத்துடன் வந்து மேகங்களுக்கிடையே புகுந்து பாணங்கள் தங்கள் மீது விழா வண்ணம் ஒளிந்து நின்று யுத்தத்தைப் பார்த்தனர். பூலோக வாஸிகள் தூரே நின்று பார்க்கும் பொழுது யுத்தகோஷத்தினால் ஒருவர்க்கொருவர் அருகிலிருந்து பேசியும் காது கேட்கவில்லை. ரதம் ரதத்துடனும் யானை யானையுடனும் குதிரை குதிரையுடனும் பதாதி காலாட்படையுடனும் சேர்ந்து உக்ரமாக யுத்தம் செய்தனர். தேவரும் அஸுரரும் யுத்தம் செய்ததுபோல் மிக பயங்கரமாகப் போர் புரிந்தனர்.

இரு ஸேனைகளிலும் அடிபட்டு கைகால் அறுபட்டு பல வீரர் பூமியில் விழுந்தனர். விழுந்தவர்மேல் மற்றவர்

விழ யுத்தபூமி மேடிட்டு ரக்த ப்ரவாஹத்தால் சேறு உள்ளது போல் தேர் ஓட முடியாமல் போயிற்று. ரக்த பிரவாஹம் ஓடிற்று. கோடி கோடி வீரர்கள் அடிபட்டிறந்தனர். பூதப்ரேதபிசாசங்கள் இதைக்கண்டு களித்தன. யுத்தத்தால் உண்டான ரக்த நதியில் வீரர்களின் தலைப்பாகை ஹம்ஸம் போலும் யானையின் உடல் தோணிபோலும் துண்டிக்கப்பட்ட கைகால்கள் பெரிய மீன்கள் போலும் பளபளவென பிரகாசிக்கும் கத்திகள் மணல் திட்டு போலும் காணப்பட்டன. ஸூர்யகேது பிரளயகால ருத்ரனைப்போல் மிக உக்ரமாக மருவை எண்ணிறந்த பாணவர்ஷங்களால் அடித்தான். கோபங்கொண்ட மருவும் ஆயிரக்கணக்கான சரங்களால் ஸூர்யகேதுவை அடித்தான்.

ஸூர்யகேது மருவின் தேரைக்காலால் உதைத்துத் தூள் தூளாக்கி குதிரைகளையும் கொன்று, கதையினால் மருவின் மாரில் அடித்தான். மரு மூர்ச்சையாகிக்கீழே விழுந்தான். தப்பித்துப் பிழைத்த ஸாரதி வேறொரு தேரில் மருவை ஏற்றிக் காப்பாற்றினான். பிருஹத்கேது தேவாபியைப் பனி ஸூர்யனை மூடுவதுபோல் சரவர்ஷங்களால் மூடினான். தேவாபி அவைகளை ஒரு நிமிஷத்தில் உதறித்தள்ளி பிருஹத்கேதுவைப் பாணங்களால் வர்ஷித்து அவனது சூலத்தையும் முறித்தான். பரம ஆக்ரஹத்துடன் அவன் ஸேனைகளையும் மருவையும் பலமாகத்தாக்கினான். மரு அவனுடைய வில்லை முறிக்க பிருஹத்கேது கத்தியால் மருவை வெட்டிக்கொல்ல ஆரம்பித்தான். மருவின் ஸாரதியையும் தேரையும் அடித்துத் தள்ளி மருவினிடம் வர, மரு அவனைக் கரதலத்தால் ஓங்கி அறைந்தான். இருவர்க்கும் பாஹு யுத்தம் நடந்தது.

பதினாறுவயதுள்ள மஹாவீரனான பிருஹத்கேதுவை மரு இரு புஜங்களாலும் இறுகக் கட்டி கீழேதள்ளி மூர்ச்சையாகி விழும்படிச் செய்தான். இதைக்கண்டு பிருஹத்கேதுவின் ஸஹோதரனான ஸூர்யத்வஜன் முஷ்டியினால் மருவை ஓங்கி சிரஸில் அடித்தான். மரு மூர்ச்சையாகி பூமியில் விழ அவனது ஸேனைகளைக் கொன்று குவித்தான். சூரித்வஜன் தன்னெதிரில் ஸர்வஜகத்திற்கும் இருப்பிடமானவரும் ஸூர்யனைப் போல் பிரகாசிப்பவரும் மேகச்யாமள வர்ணமுள்ளவரும் பீதாம்பரதாரியும்

புண்டரீகாக்ஷனும் விஶாலமான மார்புள்ளவரும் அழகிய கிரீட குண்டலமணிந்தவருமாய் நிற்கும் கல்கி பகவானைக் கண்டான். தனது ஶரீர காந்தியாலும் ஆபரணங்களில் உள்ள நாநா ரத்னங்களின் காந்தியாலும் ஹிருதயத்தில் உள்ள இருட்டையும் வெளியில்உள்ள இருளையும் போக்கி விஶாகயூபன் தர்மதேவதை க்ருதயுக தேவதை இவர்களால் பூஜிக்கப்பட்டவருமான பகவானைத் தர்ஶித்தான்.

## த்ருதீயாம்சம் — ஒன்பதாவது அத்யாயம்.

தனது த்யான காலத்தில் ஹ்ருதயத்தில் உள்ளவரும் கத்தியைக் கரத்திலேந்தி குதிரை மீது அமர்ந்து இருப்பவரும் வில்லம்புகளை ஏந்தியவரும் திவ்யாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவரும் ஸகல பாபங்களையும் தாபங்களையும் போக்குபவரும் பரமாத்மாவுமான கல்கியைப் பார்த்து ஆநந்தப் பரவசனாகி உடலெல்லாம் மயிர்க்கூச்சல் உண்டாக ஶஶித்வஜன் கூறினான். புண்டரீகாக்ஷ! வருக வருக! எனது மார்மீது பாணத்தை விட்டு ஹ்ருதயத்தை அடியுங்கள். அல்லது எனது பாணம் தங்கள் மீது விழும் என அச்சமிருந்தால் இருள் சூழ்ந்த எனது ஹ்ருதயத்தில் நுழையுங்கள்.

ப்ரபுவான உம்மிடத்தில் த்வேஷம் எனக்கில்லை. த்ருடமாக பக்தி உண்டு. இது உண்மை. பக்தனைப் போல் நான் நடிப்பேனாகில் சிவன் வேறு விஷ்ணு வேறு என்று பேத புத்தியைப் பாராட்டுகின்றவர்கள் எந்த நரகத்தை அடைவார்களோ நான் அங்கு செல்வேன் என்றான் அரசன். அச்சொல்லைக் கேட்டு கோபமில்லாத ப்ரபு கோபங் கொண்டவரைப்போல் ஆயுதமேந்தி பகைவர்களோடுப் போர்புரிய தயாராக வரும் அரசனை ஶரங்களாலடித்தார். ஶஶித்வஜன் அந்த அடிகளை இலக்ஷ்யம் செய்யாமல் சிறந்த ஆயுதங்களாலும் ஶரவர்ஷங்களாலும் பகவானைத் தாக்கினான். அரசனது பாணவர்ஷத்தால் அடிபட்ட பகவான் கோபம் கொண்டு அரசனைப் பலமாகத் தாக்கினார். இருவருக்கும் உக்ரமாக சண்டை நிகழ்ந்தது. பிரம்மாஸ்த்ரத்தை பிரம்மாஸ்த்ரத்தினாலும் வாயவாஸ்த்ரத்தை பர்வதாஸ்த்ரத்தாலும் ஆக்னேயாஸ்த்ரத்தை வாருணாஸ்த்ரத்தாலும் நாகாஸ்த்ரத்தை கருடாஸ்த்ரத்தாலும் தாக்கி ஒருவருக்கொருவர் திவ்யாஸ்த்ர ப்ரயோகத்தினால் லோக பாலர்கள்

அனைவரும் ப்ரளய காலமோவென நிடுக்கிடும்படி போர் புரிந்தார்கள்.

பாணுக்னிக்குப் பயந்து தேவர்கள் பக்ஷிகள் போல் மேலே விமானத்துடன் சென்றனர். கல்கியும் ஶஶித்வ ஜனும் சலிக்காமல் சண்டையிட்டு அஸ்த்ரங்கள் எல்லா மான பிறகு பாஹு யுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். காலாலும், கையாலும், முஷ்டியினலும் யுத்தம் செய்வதில் இருவரும் ஸமர்த்தர்களானபடியால் எல்லோரும் வியக்கும்படி போர் புரிந்தனர். பகவான் உலகெலாம் நடுங்கும்படியான சப்தத்துடன் அரசனை ஓங்கி அறைந்தார். அதனல் சிறிது நேரம் மூர்ச்சையாய் இருந்த அரசன் கோபத்துடன் எழுந்து வஜ்ரம்போன்ற முஷ்டியினல் ஓங்கி அடித்தான். அதனல் பகவான் மூர்சையாகி கீழே விழுந்தார். மூர்சையாயுள்ளபகவானை எடுத்துச்சென்று ஆச்வாஸம் பண்ணுவோமென அருகில் வந்த தர்மன் க்ருதன் என்ற இருவரையும் இரு கக்ஷங்களிலும் எடுத்துக் கொண்டு பகவானை மார்பில் சாத்திக்கொண்டு க்ருதார்த்தனகத் தன்வீடு சென்றன் ஶஶித்வஜன்.

வீட்டில் பகவானைப் பூஜித்துக் கொண்டிருக்கும் ஸுஶாந்தை என்ற மனைவியைப் பார்த்து "பகவான் மூர்ச்சை என்ற வ்யாஜமாக சிறந்தபக்தையான உனக்கு தர்சனம் அளிக்க தர்மன் க்ருதன் என்ற இருவர்களுடன் வந்திருக்கிறர் பார்" என்று மூவரையும் கீழே விட்டார். மூர்ச்சைத் தெளிந்து எழுந்திருந்த அவர்களைக் கண்டு ஶாந்தை ஆனந்தபரவசமாகி ஸகிகளுடன் கூடி பகவத் குணங்களைக்கூறி நடனம் செய்யத் துவங்கினள்.

## த்ருதீயாம்சம் — பத்தாவது அத்யாயம்.

( இங்கு கோபிகா கீதம் போல் பதினேறு ஶ்லோகங்களைப் பாடிக்கொண்டு ஶாந்தை ஆடினள்.)

ஜயஹரே ऽமராதீஶ ஸேவிதம் தவ பதாம்புஜம் பூரிபூஷணம் ।
குருமமாக்ரத: ஸாதுஸத்க்ருதம் த்யஜ மஹாமதே மோஹமாத்மந: ॥

தவ வபுர்ஜகத்ரூபஸம்பதா விரசிதம் ஸதாம் மாநஸேஸ்திதம் ।
ரதிபதேர் மனேமோகதாயகம் குரு விசேஷ்டிதம் காமலம்படம் ॥

தவ யஶோஜகச் சோக நாஶனம் ம்ருதுகதாம்ருதம் ப்ரீதிதாயகம் ।
ஸ்மித ஸுதோக்ஷிதம் சந்த்ரவந்முகம் தவகரோத்பலம் லோக [மங்களம் ॥

மமபதிஸ்த்வயம் ஸர்வதுர்ஜயோ யதிதவாப்ரியம் கர்மணுசரேத் |
ஜஹிததாத்மன: ஶத்ரு முத்யதம் குரு க்ருபாம் ந சேதீத்ருகீஶ்வர:

மஹதஹம்யுதம் பஞ்சமாத்ரயா ப்ரக்ருதி ஜாயயா நிர்மிதவபு: |
தவகிரீக்ஷணைல் லீலயாஜகத் ஸ்திதிலயோதயம் ப்ரஹ்மகல்பிதம் ||

பூவியந்மருத்வாரி தேஜஸாம்-ராஶிபி: ஶரீரேந்த்ரியாஶ்ரிதை: |
த்ரிகுணயாஸ்வயா மாயயாவிபோ-குருக்ருபாம் பவத்ஸேவநார்திநாம்

தவகுணாலயம் நாமபாவனம்-கலிமலாபஹம் கீர்த்தயந்தியே |
பவபயக்ஷயம் தாபதாபிதா-முஹுரஹோஜனா: ஸம்ஸரந்திநே ||

தவஜநு: ஸதாம் மானவர்தனம்-திஜகுலக்ஷயம் தேவ பாலகம் ||
க்ருதயுகார்பகம் தர்மபூரகம்-கலிகுலாந்தகம் ஶந்தநோதுமே |

மமக்ருஹம்பதிபுத்ர நப்த்ருஹம்-கஜரதைர்த்வஜைச் சாமரைர்தனை:
மணிவராஸனம் ஸத்க்ருதிம் விநா-தவ பதாப்ஜயோ: ஶோபயந்திகிம்

தவஜகத்வபு: ஸுந்தரஸ்மிதம்-முகமநிந்திதம் ஸுந்தராரவம் |
யதி நமேப்ரியம் வல்குசேஷ்டிதம்-பரிகரோத்யஹோம்ருத்யுரஸ் [த்விஹ ||

ஹயசரபயஹர கரஹர-ஶரணகரதர வரஶர தஶபலமதன |
ஜயஹதபரபவவர-ஶந ஶஶதர ஶதஸமர ஸபரவதன ||

இந்த பதினேருவது ஶ்லோகத்தில் அகாரம் தவிர வேறு எந்த அச்சும் சேராமல் விசித்ரமாக ஶ்லோக அமைந்துள்ளது. இங்ஙனம் ஸுசாந்தையினுடைய கானத்தைக் கேட்டுக் களிப்படைந்த கடவுள் யுத்தரங்கத்தில் போர் வீரன் சயனம் செய்துக்கொள்வது போல் படுத்திருந்தார். எதிரில் ஸுசாந்தையின் இடது புறத்தில் க்ருதயுகமும் தென்புறத்தில் தர்மனும் மேற்கு புறத்தில் ஶஶித்வஜனும் நிற்க பகவான் கூறினர்.

தாமரைப்போன்ற கண்ணுடைய பெண்ணே நீ யார்? ஶஶித்வஜனைப்போல் நீயும் எனக்கு ஸேவை செய்ய வந்தவள் போ்ல் தோன்றுகிறது. தர்ம! க்ருதயுக! நாம் எப்படி இங்கு வந்தோம்? யுத்தரங்கத்தைவிட்டு சத்ருவினுடைய அந்தப் புறத்திற்கு ஏன் வந்தோம்? ஶத்ருவான எனக்கு பகைவர்களின் பத்னி எப்படி பணிவிடை செய்கிருர்கள். சூரனை ஶஶித்வஜன் மூர்ச்சையடைந்த என்னை ஏன் கொல்லவில்லை? என வினவினர். ஸுசாந்தைக் கூறினள்: ஓ பகவன்! பாதாளத்திலோ வானிலோ நிலத்திலோ உள்ளவர்கள் நாராயணனை உமக்கு

எப்படி ஸேவை செய்யாமல் இருப்பார்கள்? உம்மை ஸேவிக்கின்றவர்களை அல்லது உமது நண்பர்களைத் தர்ஶனம் செய்தாலே பகைவன் என்ற எண்ணம் ஒழியும். அப்படியிருக்க ஸாக்ஷாத் ப்ரத்யக்ஷமாக இருக்கும் தாங்கள் எப்படி பகைவராவீர்? உம்மிடம் பகைவன் என்ற எண்ணமிருந்தால் என் கணவன் எப்படி அரண்மனைக்கு அழைத்து வருவார்? என்கணவனும் நானும் தங்களுக்கு அடிமைகள். எங்களுக்கு அருள்புரியவே தாங்கள் வந்தீர்கள். தர்மதேவனும் பகவானைப் பார்த்துக் கூறினர். ஸ்வாமின்! இந்த தம்பதிகள் உம்மைத் தர்சித்து உங்கள் நாமாவைக் கூறுவதால் நான் க்ருதார்த்தனுகி தாங்களும் பக்தர்களும் உள்ள விடத்திற்கு வந்தேன். க்ருதயுகம் கூறிற்று:

ஸ்வாமின்! தாஸனுன நான் தங்களுடைய தர்ஶனத்தினுல் தங்கள் ஸேவகனுன அரசனது பக்தியினுலும் இப்போதே யான் க்ருதயுகனுனேன். ஶஶித்வஜன் கூறினுன். ஏ விபோ! தங்களோடு யுத்தத்திற்கு வந்தவனும் ஆயுதம் ஏந்தியவனும் தண்டிக்கத்தக்கவனுமான என்னை தண்டியுங்கள். எனது ஆத்மாவான தங்களிடத்தில் காமத்தினுல் அல்லவோ யுத்தத்திற்கு வந்தேன் என்ருர். இங்ஙனம் நால்வரும் கூறியதைக் கேட்டு பகவான் கல்கி மந்தஹாஸத்துடன் அரசனைப் பார்த்து வீரனை வேந்தே! நீ என்னை ஜயித்து விட்டாய்! உன்னிடம் யான் தோல்வியுற்றேன் என்ருர். அரசன் யுத்தரங்கத்தில் உள்ள தனது தனயன் ஸேனுதிபதி முதலியவர்களை யுத்தத்தை நிறுத்திவிட்டு வரும்படி அழைத்தார். அரண்மனையில் பகவானைப்பார்த்து எல்லோரும் ஆனந்தப்பரவசர்களாகி அவரை வணங்கித் துதித்தார்கள். ஸுசாந்தை, நாங்கள் பகவானுக்குச் செய்த அபசாரத்திற்கு பரிஹாரமாக நமது பெண்ணுன "ரமா" என்பவளை கல்கிக்குக் கொடுத்து விவாஹம் செய்து வைக்க வேண்டுமென தன் பதியை வேண்டினுள். அவருமதை ஏற்ருர். யுத்தரங்கத்தில் உள்ள மருதேவாபி விசாகயூபன் முதலிய அனைவரையும் போரை நிறுத்தி வரும்படியழைத்து அவர்களுடனும் புது மனைவியுடனும் பல்லாட நகரம் வந்தார். அங்கு விதிப்படி விமரிசையாக ரமாதேவிக்கும் கல்கிக்கும் விவாஹம் நடைபெற்றது. பற்பல தேசத்தில் உள்ள அரசர்களும் அந்த விவாஹத்திற்கு வந்து சிறந்த காணிக்கைகளையும் தந்து தம்பதிகளைத் துதித்தார்கள்.

பகவான் நக்ஷத்திரங்களிடையே சந்திரன் போல் அரசர்களினடையே அதிக ப்ரகாசத்துடன் விளங்கினர்.

## த்ருதீயாம்சம் — பதினேருவது அத்யாயம்.

அரசர்கள் அனைவரும் ஸுமாங்கையையும் அவள் பதியான ஶஶித்வஜனையும் பார்த்து பகவானுக்கு மகளை யளித்து மாமனர் மாமியாராக ஆகவும் அவரிடம் பக்தி கொள்ளவும் என்ன புண்யம் செய்திர்கள்? எவரிடமேனு மிதைக்கற்றீர்களா? அல்லது இயற்கையாகவே உண்டானதா? ஸம்ஸார துக்கத்தை யகற்றக்கூடிய பகவானுடைய சரிதத்தைக்கூறு என்று வேண்டினர்கள். இதைக்கேட்டு ஶஶித்வஜன் கூறினன். அரசர்காள்! எங்கள் பூர்வசரிதத்தைக் கேளுங்கள். நாங்களிருவர்களும் ஆயிரம் யுகத்திற்கு முன்பு கழுகு தம்பதிகளாகவிருந்தோம். ஒரு மரத்தில் கூடுகட்டிக்கொண்டு ஆங்காங்கு இறை தேடிக் கொண்டு வந்து இரவில் அங்கு தங்குவோம். இறந்தவர்களின் உடலைக்கொத்தி நாங்கள் புசித்து வயிறுவளர்த்தோம். வேடன் ஒருவன் மாம்ஸத்தைக் காட்டினன். அதில் ஆசையுள்ள எங்களை வலையில் சிக்கவைத்தான். அவன் எங்களைப்பிடித்து கழுத்தை முறிக்கும் பொழுது மூக்கால் குத்தி அவனுக்குக்கஷ்டத்தை உண்டுபண்ணினேம். உடனே அவன் கண்டகீநதியில் உள்ள ஒரு கல்லை எடுத்து எங்கள் தலையை நசுக்கிக் கொன்ருன். அந்த கல் சாளக்கிராமஶிலை ஆனதாலும் அந்நதி கங்காஸம்பந்தமுள்ளது ஆனதாலும் ஜ்யோதிர்மயமான திவ்ய சரீரம் பெற்று திவ்ய விமானத்தில் வைகுண்டம் சென்ரேம். ஆங்கு நூறுயுகம் ஸுகத்தையனுபவித்து அங்கிருந்து பிரம்மலோகம் சென்ரேம். ஆங்கு ஐநூறுயுகம் பிரம்ஹலோக ஸுகத்தைப்பெற்று அங்கிருந்து இங்கு அரசனுக வந்தேன்.

நான் முன் யாராக இருந்தேன்? என்ற நினைவும் எனக்கு இருக்கின்றது. இத்தகைய பலனைக் கொடுப்பது ஸாளக்ராம ஶிலையும், நர்மதா மரணமுமே. இவைகளுக்கே இவ்வளவு சக்தி உண்டென்ருல் வாஸுதேவனுக்கு எவ்வளவு சக்தி இருக்கும்? என நாங்கள் ஸதா விஷ்ணு பூஜையில் ஈடுபட்டோம். அவர் ஸன்னதியில் பக்தி பரவஶராகி பாடுவோம். ஆடுவோம். பிரும்மலோகத்திலிருக்கும் பொழுது பகவான் கலியைச்சிக்ஷிக்க

கல்கியாக அவதரிக்கப் போகிருர் எனக்கேட்டோம். அவரைத்தர்சித்துப் பூஜிக்கவே அவருடன் போர் புரிந் தோம் என்ருர். அன்றியும் பகவானுக்கு பத்தாயிரம் யானைகளையும் லக்ஷம் குதிரைகளையும் ஆருயிரம் ரதங் களையும் அறு நூறு தாஸ தாஸிகளையும் விலைஉயர்ந்த ரத்நங்களையும் தந்தான். ஶஶித்வஜனது சரிதத்தைக் கேட்டு ஆஸ்சர்யமடைந்த அரசர்கள் அவரை வணங்கி, பக்தியின் லக்ஷணம் பக்தர்களது லக்ஷணம் பக்தனது நிலை செயல் முதலியவைகளை விஸ்தாரமாகக் கூறும்படி வேண்டினர்கள்.

பிரும்ம ஸதஸ்ஸில் தான் நாரதரிடம் கேட்ட இந்த விஷயங்களை சசித்வஜன் கூறினன். நீங்கள் கேட்ட வண்ணம் ஸநகர் நாரதரைப் பார்த்து ஜநந மரணங்களை அகற்றவல்லதான பக்தி எது? என முதலில் கூறுங்கள் என்ருர். ஐந்து இந்த்ரியங்களையும் மநதையும் அடக்கி முதலில் நமது உடலை குருவிற்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். குரு ப்ரஸன்னமானல் பகவான் அருள் புரி வார். குரு உத்தரவுபடி ஓம் நமஸ்வாஹா - என்பதில் நம: என்பது பகவத்ஸ்ரூபம் என ஏகாத்ரசித்தமாக த்யாநம் செய்ய வேண்டும். பிறகு த்யாந ஆவாஹந ஆஸந அர்க்ய பாத்யாதிகளால் பகவானைப் பூஜிக்க வேண்டும். ஏகாந்தமாக த்யாநம் செய்ய வேண்டும். மற்ற தேவர் களெல்லாம் விஷ்ணுவின் அங்க மானவர்கள். விஷ்ணு வினுடைய நாமாக்கள் எண்ணிறந்தவை. அவைகளைக் கொண்டே அவரது அங்கமான தேவர்களையும் அழைக் கின்ருேம். கிருஷ்ணன் ஒருவரே ஸேவிக்கத்தக்கவர். மற்றவர்கள் அவரது மாயையால் உண்டானமூர்த்திகள். அவரே உலக ஸ்ருஷ்டி ஸ்திதி லய காரணமாவார்.

நாராயணனை விட வேறு வஸ்து இல்லை. என்ருலும் அவரைப் பூஜிக்கும் போது ஸேவ்யர் ஸேவகர் என்ற த்வைதம் தோன்றும். நிஷ்டையில் அமர்ந்தவர் கிருஷ்ணனைத்தவிர வேருென்றையும் தன்னையுங்கூட காண்பதில்லை. பக்தன் பகவானை ஸ்மரிப்பான். அவர் நாமாக்களைப் பாடுவான். அவரிட்ட கட்டளையான கர் மாக்களைக் காமனையின்றி செய்வான். ஸுகஸ்வரூபியாகி விடுவான். ஆடுவான். பாடுவான். அழுவான். சிரிப்பான். பூமியுல் வீழ்ந்து புரளுவான். இத்தகைய பக்தியே எல்லோரையும் பாவனமாகச் செய்யும்.

வேதத்தில் பக்தி முதலாவது ஸாதநமாகக் கூறப்படு கிறது. அது இயற்கையாய் அநாதியாயுள்ளது. ஸாத் விக பக்தி உள்ளவர் நிர்க்குண பிரும்மத்துடன் சேர்ந்து ஐக்யமாவர். ராஜஸ பக்தியுள்ளவர் விஷய ஆசைகொண்டு திரிவர். தாமஸ பக்தி உள்ளவர் நரகம் செல்வர்.

ஸாத்விக பக்தர் விஷ்ணுவுக்கு நிவேதனமாகி சுத்த மானதை உட்கொள்வார். இந்த்ரியங்களுக்கு இன்பம் ஊட்டுவதும் சுக்ரசோணிதங்களை விருத்திசெய்வதுமான ராஜஸ உணவு ஆயுளையும் ஆரோக்யத்தையும் மாத்ரம் தரும். பழையதும் மிகக் காரம் புளி உப்பு சேர்ந்தது மான உணவு தாமஸமாம். ஸாத்விகர் வநத்திலும் ராஜஸர் க்ராமத்திலும் தாமஸர் குடி, தாஸி, சூதாட்டம் உள்ள இடத்திலும் வஸிப்பர். விஷ்ணு பக்தனுக்கு ஒன் றையும் தருவதில்லை. பக்தன் ஒன்றையும் யாசிப்பது இல்லை. ஆயினும் இருவர்க்குமுள்ள அன்பு ஆச்சர்ய மானது. இது போன்ற விஷயங்களைக்கூறி ஸநகர் இந்த்ரலோகம் சென்றார்.

## த்ரிதீயாம்சம்—பன்னிரண்டாம் அத்யாயம்.

இங்ஙனம் யான் கேட்ட பக்தி பக்தர் லக்ஷணங்களைக் கூறினேன். மேலும் என்ன கூறவேண்டும்? என ஶஶி த்வஜன் கேட்க அரசர்கள் கூறினார்கள். ராஜன்! தாங்கள் வைஷ்ணவ ஶ்ரேஷ்டர். எல்லோருக்கும் ஹித மானவர். அத்தகைய நீர் ஹிம்ஸை நிறைந்த யுத்தத் தில் பிரவேசித்தீர். ஸாதுக்கள் பெரும்பாலும், விஷய ஸுகத்திலீடுபட்ட ஸகல பிராணிகளுக்கு வாக்காலும் உடலாலும் பொருளாலும் ஹிதம் செய்வர் அல்லவா? தாங்கள் போரில் புகுந்த காரணம் என்ன ?

ஶஶித்வஜன்: மூன்று குண வடிவமான பிரக்ருதி, பகவான் வேறு. உலகம் வேறு. என்ற த்வைதத்தைக் கல்பித்து உலகையும் வேதத்தையும் படைத்தது. அந்த வேதங்கள் முவ்வுலகிலும் அதர்மத்தை அகற்றி தர்மத் தைச் செய்ய வழி காட்டுகிறது. பக்தியை விளக்குகிறது. உலக இன்பத்தில் ஈடுபட்டவர்களுக்கும் சில விஷயங் களைக் கூறுகிறது. வேதத்தின் கரைகண்ட மநு வாத்ஸ் யாயநர் முதலியவர்கள் பகவானது உத்தரவிற்கிணங்க பல க்ரந்தங்களை இயற்றினார்கள். நான்கு வர்ணங்க ளுக்கும் தனித்தனியாகச் சில கர்மாக்களை வகுத்தனர்.

அதைக் கைபற்றுபவர்களில் நானும் ஒருவன். வேதத்தின் கருத்திற்கிணங்க கொல்லவருபவர்களைக் கொல்வோம். ஸர்வ வேதார்த்தங்களையும் நன்குணர்ந்த பெரியோர் கை பற்றிய வழி இது. கொல்லத்தகாதவனைக் கொன்ருல் எவ்வளவு பாபமோ அவ்வளவுபாபம் கொல்லத்தக்கவனை கொல்லாமல் விட்டால். என ஸகல வேத ஶாஸ்த்ரம் உணர்ந்த பகவான் வேதவ்யாஸர் கூறுகிருர். ஸேனையைக் கொல்வது அதர்மமல்ல. அதற்கு ப்ராயஶ்சித்தமுமில்லை. அதனுல் உங்கள் ஸேனையை எதிர்த்துப் போர் புரிந்தேன்.

தர்மம் கிருதம் கல்கி இவர்களை ஜயித்துப் பூஜை செய்வதற்காக இங்கு எடுத்துவந்தேன். வேதஶாஸ்த்ரத்தை அனுசரித்தே கேட்கிறேன். ஸர்வ வியாபியான பகவானை யார் கொல்வது? கொல்லப்படுவது யார்? எல்லாம் விஷ்ணுமயமாக இருக்க யுத்தம் என்ற யாகத்தில் பகைவரைக் கொல்வது வதமாகாது என பதினான்கு மநுக்களும் முனிவர்களும் காநம்செய்கிருர்கள். ஆதலால் யுத்தத்தாலும் யக்ஞத்தாலும் விஷ்ணுவைப் பூஜிக்கிறேன். பகவானது மாயையைத் தழுவி ஸேவ்ய ஸேவக பாவத்தைக்கொண்டு ஸுகமாக இருக்கிறேன். என்று ஶஶித்வஜன் கூறியதைக்கேட்ட அரசர்கள் மறுபடியும் சில ஸந்தேஹங்களைக் கேட்டனர்.

இக்ஷ்வாகுவின் புத்ரனுன நிமி என்றஅரசன் வஸிஷ்டரை வணங்கி தனக்கு ஒரு யாகம் செய்து வைக்க வேண்டுமென ப்ரார்தித்தார். வஸிஷ்டர் ஏற்கெனவே இந்திரன் என்னை யாகம் செய்து வைக்க அழைத்தான். அதை ஏற்றுக்கொண்டேன். அதை முடித்தபின் உனக்கு செய்விக்கிறேன் என்ருர். அரசன் பதில் கூருததால் அதற்கு ஸம்மதித்தான் என வஸிஷ்டர் இந்த்ர யாகத்தை செய்யச் சென்ருர். அரசன் அதற்குள் வேறு ஒருவரைக் கொண்டு யாகம் செய்தான். அதைக்கண்டு கோபம் கொண்ட வஸிஷ்டர் அரசனை நீ இவ்வுடலை இழப்பாய் என ஶபித்தார். அரசனும் பொருளாசையால் இந்த்ரனிடம் சென்ற நீரும் உடலில்லாதிருப்பீர் எனச் சபித்தான். தேவர்கள் வந்து இருவர்களையும் ஸமாதானம் செய்து வஸிஷ்டருக்கு மித்ராவருணர் மூலமாக சரீரம் உண்டாகுமென வரமளித்து அரசனுக்கும் வரமளிக்க வந்தனர். அரசன் எனக்கு உடல் வேண்டாம். எல்லோருடைய

கண் இமைகளில் வஸிக்கிறேன் என்றான். இந்த விஷயத்தில் ஸந்தேஹம் எங்களுக்கு.

ஸகல ஸுகங்களையும் அநுபவிப்பதற்காக ஏற்பட்ட உடலை நிமி வேண்டாத காரணமென்ன? ஶிஷ்யனது ஶாபத்தால் வஸிஷ்டரும் உடலை விட்டு வேறு உடலைப் பெற்றாரே? பக்தனுக்கு மறுபிறவி இல்லை என்பது எப்படி? பகவானது மாயை இந்த்ரஜாலம் போல் அறிய முடியாததாக இருக்கின்றது. க்ஞானிகளைக்கூட ஏமாற்றுகின்றதே. பக்தன் எப்படி மாயையை ஜயிப்பது? என்று கேட்க; ஶ்ருதித்வஜன் பதிலளித்தான். பலபிறவிகளுக்குப்பின் தீர்த்த க்ஷேத்ராடனம் முதலிய புண்யங்களால் தெய்வச்செயலால் சிலருக்கே ஸாது ஸங்கம் ஏற்படும். ஸத்ஸங்கத்தால் பகவானைத் தர்சிக்கும் பாக்யம் கிட்டும். அதனால் வைகுண்டம் சென்று பல்லாண்டு பரம ஸுகத்தை அநுபவித்து பூமியில் பக்தனாகப் பிறக்கிறான். அதில் ரஜோகுணமுள்ளவர் கர்மா ஹரிபூஜை நாம ஸங்கீர்த்தனம் பகவத்யாநம் அவதார திந விரதம் முதலியவைகளால் பரமாநந்தம் அடைகின்றனர்.

இந்த ஆநந்தத்திலீடுபட்டவர் பகவானுடன் இரண்டறஒன்றாகக் கலக்கும் இன்பத்தை விரும்புவதில்லை. பகவானைப் பாடி பூஜிக்க பல பிறவிகளை விரும்புகின்றனர். அவர்கள் பகவானது உருவங்களே ஆவர். க்ஷேத்ர தீர்த்தாடநாதிகளால் தங்களையும் பாவநமாக்கி தீர்த்தங்களையும் பாவனமாக்குகின்றனர். பகவத் ஸ்வரூபத்தை விளக்கும் பக்தர்களாகப் பிறக்கின்றனர். க்ருஷ்ணனது அவதார லீலைபோல் தனக்கு உடல் வேண்டாமென்ற நிமி எல்லோருடைய கண் இமைகளிலிருந்து வருகிறார். முக்தரும் பக்தருமான வஸிஷ்டர் பகவத்பக்தி செய்வதற்காகவே வேறொரு உடல் எடுத்தார். வியாஸர் முதலிய பல முனிவர்களும் பற்பல சாஸ்த்ரங்களில் நிபுணர்களாக இருந்தும் க்ருஷ்ணபக்தி எனும் நவநீதத்தையே அன்புடன் கைக்கொண்டனர். கிருஷ்ணபக்தி காமம் கோபம் முதலியவைகளை அகற்றும். ஸர்வ இந்த்ரியங்களுக்கும் ஆனந்தமளிக்கும். ஜநந மரண துன்பத்தை அகற்றும். முடிவில் முக்தியைத்தரும்.

## த்ருதீயாம்சம்—பதிமூன்றும் அத்யாயம்.

இங்ஙனம் தனது சரிதத்தைக்கூறி அஞ்ஜலி பந்தத்துடன் பகவானை கல்கியைப்பார்த்துக் கூறினார். நாத! நீ

த்ரிலோகேசன். இவ்வரசர்கள் உம்மைச் சார்ந்தவர்கள். நானும் உமது கிங்கரனே ஆவேன். முனிவர்களுக்குப் பிரிய மான ஹரித்வாரத்திற்குத் தவம் செய்யச் செல்கிறேன். எனது புத்ர பௌத்ரர்களைக் காத்தருளும். த்விவிதன் ஜாம் பவான் இவர்களைப்போல் நானும் உடலை விட்டு உமது திருவடியை அடையவேண்டும் என்றான் அரசன். இதைக் கேட்ட பகவான் ஒன்றும் கூறாமல் தலைகுனிந்தவண்ண மிருந்தார். அருகிலுள்ள அரசர் அனைவரும் பகவானை வணங்கி ப்ரபோ! அரசன் என்ன கூறினான்? தாங்கள் ஏன் தலைகுனிந்து மௌனமாக இருக்கிறீர்? என்று வினவி னர். அரசர்களே! என்னிடம் ஆழ்ந்த பக்தியுள்ளவனும் க்ஞானியுமான அவ்வரசனையே கேளுங்கள் என்றார் கல்கி. அங்ஙனமே அனைவரும் அவரைக்கேட்க சசி த்வஜன் கூறினான்.

முன்னர் பகவான் ராமனாக அவதரித்தபோது லக்ஷ்ம ணன் இந்த்ரஜித்தை நிகும்பிலா யாகத்தில் கொன்றார் அல்லவா? இந்த்ரஜித் பிராம்மணன் யாகசாலையிலுள்ள அவரைக் கொன்றதால் அந்த பாபம் ஏகான்னிகஜ்வரம் என்ற நோயாகி லக்ஷ்மணனை மிகவும் பீடித்தது. இதை அறிந்த அச்வினீ புத்ரரான த்விவிதன் ஸ்ரீ ராமநாமாவை ஒரு பத்ரத்தில் எழுதி மேலிருந்த வண்ணம் லக்ஷ்மண னிடம் காண்பித்தார். அதைக்கண்டவுடன் ஜ்வரம் அகன் றுவிட்டது. அதனால் ஸந்தோஷமடைந்த லக்ஷ்மணன் உனக்கென்ன வரம் வேண்டுமெனக் கேட்டார். த்விவிதன் ஸ்வாமின் உமது கையால் யான் மரிக்கவேண்டும். குரங்கு ஜன்மம் அகலவேண்டுமென்று கேட்டார். இப் பிறவியில் அதுவேண்டாம். நான் க்ருஷ்ணவதாரத்தில் உன்னைக் கொல்கிறேன் என்றார். அப்படியே அவன் துவாபர யுகத்தில் பகவானை பலராமனால் அடித்துக் கொல்லப்பட்டான். குரங்கு ஜன்மாவும் அகன்றது. திவ்ய சரீரம் பெற்று வைகுண்டம் சென்றான்.

ஸமுத்ரஸ்யோத்தரே தீரே த்விவிதோ நாம வநர: |
ஐகாஹிகம் ஜ்வரம் ஹந்தி லிகிதம் யஸ்து பச்யதி ||

என்ற சுலோகத்தைப் பனை ஓலையில் எழுதி வாசற் படியில் கட்டி அதைப் பார்த்தால் ஒருநாள்ஜ்வரமகலும். லோமகர்ஷண ஸூதரும் பகவான் மூலமாக மரணம் வேண்டுமென வரங்கேட்டு க்ஷேத்ரயாத்ரைக்குச் சென்ற

பலராமரால் கொல்லப்பட்டு நான்காம் வர்ண ஜன்மாவை விட்டு நற்கதிப் பெற்ருர். பகவான் த்ரிவிக்ரமாவதாரம் செய்தபோது பிரும்மாம்ஸமான ஜாம்பவான் வாயுவேகத்துடன் மேலே கிளம்பி மூன்ருவது பாதத்தை ப்ரதக்ஷிணம் செய்தார். அதனல் ஸந்தோஷமடைந்த பகவான் உனக்கு என்னவரம் வேண்டுமென்ருர்? தங்களது சக்ரத்தால் அடிபட்டு யான் இறக்க வேண்டும். இவ்வுடல் அகன்று நற்கதி வேண்டுமென்ருர். பகவான் க்ருஷ்ணனுகத் தோன்றிய போது ஸுஶித்வஜனை நான் ஸத்ராஜித் என்ற பெயருடன் இருந்தேன். ஸூர்யன் அருளால் எனக்குக் கிடைத்த ஸ்யமந்தகமணியை க்ருஷ்ணன் அபஹரித்தார். என்று யான் அபவாதத்தைக் கூறியபோது பகவான் உண்மையை விளக்கி ஸத்ராஜித்தின் தம்பி பிரஸேநன் என்பவன் அம்மணியை எடுத்துச் சென்றதையும் அவனை ஒரு ஸிம்மம் கொன்று மணியை எடுத்துச் சென்றதையும் அந்த ஸிம்மத்தைக் கொன்று ஜாம்பவான் அந்த மணியுடன் குஹைக்குச் சென்றதையும் காட்டினர். குஹைக்குள் புகுந்து சக்ர ஜ்வாலையால் அவனைக் கொன்ருர். ஜாம்பவான் இவர் ஸ்ரீ ராமர் என உணர்ந்து லக்ஷ்மணனுடன் தனக்கு ராமனுகவே தர்ஶனம் தர வேண்டுமென ப்ரார்த்தித்து மணியையும் ஜாம்பவதியையும் அளித்தார்.

அந்த மணியைப் பகவான் என்னிடமளித்தார். வீணுகப் பழி கூறினேமோ என வெட்கித்து எனது பெண்ணுன ஸத்யபாமையை அவருக்கு அளித்தேன். அவளை மணந்து பகவான் அஸ்தினுபுரம் சென்றிருந்தபோது ஶததன்வா என்ற அரசன் என்னைக் கொன்று மணியை எடுத்துச் சென்ருன். நான் இது முதலிய பூர்வ ஜன்மவிஷயத்தை நன்கறிந்தவன். ஆதலால் பகவான் மீது வீணுக பழிசுமத்திய பாபமகல அவரே என்னை இப்போது சக்ரத்தால் கொல்ல வேண்டுமென போரில் ஜயித்து கல்கியை வீட்டிற்கு அழைத்து வந்தேன். அந்த ஸத்தியபாமையே எனது பெண்ணுன ரமா என்பவளாகத்தோன்ற அவளைப் பகவானுக்கு அளித்தேன். அவர் மாமனுர், என்னை எப்படிக் கொல்வது? என்று வெட்கத்தினுலும் தர்மபயத்தினுலும் தலைகுனிந்து நிற்கிருர் என்ருன் ஶஶித்வஜராஜன். ஆஶ்சர்யமான இதைக்கேட்டு மஹரிஷிகளும் அரசர்களும் ஆநந்தபரவசரானுர்கள். இந்த சரிதத்தை

ஶ்ரத்தையுடன் கேட்பவர் இம்மையில் ஆயுஸ் கீர்த்தி ஸுகம் தநம் முதலியவைகளைப் பெற்று முடிவில் மோக்ஷத்தை அடைவர்.

## த்ருதீயாம்சம்–பதிநான்காமத்யாயம்.

கல்கி ஶஶித்வஜனுக்கு வரமளித்து அனைவரிடமும் விடைபெற்று ரமா எனும் புதுமனைவியுடன் புறப்பட்டுச் சென்றார். அரசன் புத்ரனிடம் ராஜ்யத்தை அளித்து மாயாதேவியைப் பூஜித்து மாயா பந்தத்திலிருந்து விடுபட்டு தவம் செய்ய வநம் சென்றான். கல்கி தனது ஸேனைகளுடன் காஞ்சநீபுரீ என்ற இடத்திற்குக் கிளம்பினார். அது மிகக்ரூரமான விஷப் பாம்புகள் சூழ்ந்த இடம். பலவகை மணிமயமான சித்ரங்கள் உள்ளது. அழகான நாககன்யகைகளால் சூழப்பட்டது. ஹரி சந்தந மரங்கள் அடர்ந்தது. மநித பூண்டே இல்லாதது. அதைக்கண்ட பகவான் அரசர்களைப்பார்த்து, ஓ மன்னர்களே! கண்டவுடன் நரர் நடுங்கும்படியான நகரம் இது. நாககன்யகைகள் கூட்டம் கூட்டமாக உள்ள இந் நகரத்திற்குள் எப்படிச் செல்வது? என்று கேட்டார். அரசர்களும் அங்கு போவதா வேண்டாமா என்று ஒன்றும் புரியாமல் பேசாதிருந்தனர். அச்சமயம் ஆகாசத்திலிருந்து ஒரு சப்தம் வந்தது. ஓ பகவன்! கொடிய விஷ கன்யகைகள் உள்ளவிடத்திற்குச் செல்ல வேண்டாம். சென்றால் உம்மைத்தவிர அனைவரும் இறப்பர்.

இதைக்கேட்ட பகவான் உடன் வந்த ஸேனையை அங்கேயே நிறுத்தி விட்டு தான் மாத்ரம் சிவன் தந்த கத்தியைக் கரத்திலேந்தி கிளியுடன் குதிரை மீதேறிச் சென்றார். எத்தகைய தீரரையும் தைர்யத்தை இழக்கும்படிச் செய்யும் அற்புதமான விஷ கன்யகையைக் கண்டார். அவளும் ஒப்பற்ற ரூப லாவண்யம் வாய்ந்த பகவானைப்பார்த்து, "எனது கண்களைக் கண்டவுடன் எத்தனை வீர க்ஷத்ரியர்கள் மாண்டனர்! தேவாஸுர நரர்களில் எந்த புருஷரையும் கண்ணால் காணும் பாக்யமில்லாத பரம தீனையான என் கண்ணுக்கு அமிருதத்தை அள்ளிப்பூசி ஆநந்தமளிக்கும் உமக்கு நமஸ்காரம். விஷக்கண்ணுடைய நான் எங்கே அமிருதக்கண் படைத்த தாங்கள் எங்கே? ஏதோ ஒரு பெரிய தவத்தின் பயனே உம்மைக்காண்பது என்றாள். கல்கி, பெண்ணே நீ யார்? எதனால் உனக்கு இந்த கதி? எந்த கர்மாவால் விஷ

நேத்ரமுள்ளவளானுய் கூறு! என்ருர்! விஷகன்யகை, கூறினுள். ஸ்வாமின்! நான் சித்ரக்ரீவன் என்ற கந்தர்வனது மனைவி! ஸுலோசநா என்பது என் பெயர். பதிக்கு இஷ்டமானபடி நடந்து இன்பமளித்து வந்தேன். ஒருநாள் நான் பதியுடன் விமானத்திலேறிச் சென்று கந்தமாதந குஹையிலும் அருகிலுள்ள குஞ்ஜங்களிலும் கணவனுடன் சிருங்காரமாக ரமித்துக்கொண்டிருந்தேன். அங்கே யக்ஷமுநி ஒருவர் என்கண்ணில் பட்டார். அவர் மிக விகாரமான உருவம் உள்ளவர். துர்குணமுமுள்ளவர். ரூப யௌவன கர்வத்தால் அவரைக் கடாக்ஷத்தினுல் பார்த்து பரிஹாஸத்துடன் சிரித்து இப்படியும் ஒரு உருவா? என்றேன். இதைக்கேட்ட முநிவர் கோபங்கொண்டார். நீ விஷ நேத்ரமுள்ளவளாக வேண்டும். தேவாஸுர நரர் இல்லாத காஞ்சநபுரியில் வஸிப்பாய். உனது பதியோ வேறெந்த தெய்வமோ உன்னைக்காணமுடியாது. உனது கண்பார்வை பட்டவுடன் எதிரில் உள்ளவர் பற்றி எறிவர். என என்னைச் சபித்து ஸர்ப்ப நகரத்தில் தள்ளினுர். என்ன புண்யத்தாலோ உமது கடாக்ஷம் விழுந்தது இப் பாபிமீது. இனி எனக்கு நற்கதி உண்டாகுமென்பதில் ஐயமில்லை. தங்களைத் தர்ஶிக்கும்படியான பாக்கியத்தைப் பெற்றேன். அத்தகைய மஹான்களுடைய ஶாபமும் கூட பிரஸாதமேயாகும். இல்லையேல் எனக்கேது இந்த பாக்யம்? என்று கூறி பகவானை நமஸ்கரித்து திவ்ய விமாநத்திலேறி ஸ்வர்க்கம் சென்ருள். பகவான் தன்னைச்சார்ந்த மஹாமதி என்பவனை அத்த நகரத்தில் அரசனுக்கினுர். அந்நாடு நல்ல நாடாயிற்று. மஹாமதியின் புத்ரன் அமர்ஷன். அவனிடமிருந்து தீமான் ஸஹஸ்ரன் அஸி என அந்தவம்ஶஸந்ததி பெருகிற்று. பிருஹன் நல அரசர் வம்சத்தில் உதித்த மநு என்பவனை அயோத்யையில் அரசனுக்கி கல்கி மதுரா நகரம் சென்ருர். ஸூர்யகேது என்பவரை அங்கு அரசனுக்கி வாரணுவதமென்ற நகரத்தில் தேவாபியை ப்ரதிஷ்டை செய்தார். அரிஸ்தலம் விருகஸ்தலம் மாகந்தம் கஜம் என்ற நாடுகளுக்கும் தேவாபியையே அரசனுக்கினுர். அதனுல் அவனுக்கு பஞ்சதேசேச்வரன் என்ற பெயர் உண்டாயிற்று.

சம்பள நகரத்திற்கு வந்து ஶௌம்பம் பௌண்ட்ரம் புலிந்தம் ஸுராஷ்ட்ரம் மகதம் என்ற தேசங்களைத் தனது ஸஹோதரர்களான கவி, ப்ராக்ஞன், ஸுமந்த்ரன் முதலிய

வர்களுக்குத் தந்தார். கீகடம் மத்யகர்ணுடம் ஆந்த்ரம் ஒண்ட்ரம் கலிங்கம் அங்கம் வங்கம் ஆகிய இத் தேசங் களில் தனது கோத்ரத்தில் தோன்றியவர்களை அரசர் களாக ப்ரதிஷ்டை செய்தார். மஹாப்ரதாபமுள்ள கல்கி தான் ஶம்பள நகரத்திலிருந்து கங்கம் கலாபம் என்ற நாடுகளை விஶாகயூபனுக்களித்தார். த்வாரகாதேசத்தின் நடுவிலுள்ள சோல பர்பர, கர்ப முதலிய தேசங்களை க்ருதவர்மா முதலிய தனது புத்ரர்களுக்கு அளித்தார். தந்தைக்குத்தான் ஜயித்த நாடுகளிலிருந்து கொண்டு வந்த உயர்ந்த ரத்நங்களை அளித்தார். குடிகளை ஸந்தோஷப் படுத்தி பத்மா, ரமா என்ற மனைவிகளுடன் ஸுகமாக வாழ்ந்தார். மூன்று லோகங்களும் ஸந்தோஷமடைந்தன. க்ருதயுகம் நான்கு காலுள்ள தர்மத்துடன் உலகில் பறவிற்று.

தேவர்கள் உலகிற்கு முன்போல் மழை முதலியவை களைத் தந்து மாநவர் அளிக்கும் யாகத்தால் ஸந்தோஷ மடைந்தனர். பூமியில் பயிர்கள் செவ்வனே விளைய ஜனங்கள் புஷ்டியாக வாழ்ந்தனர். ஆதி வ்யாதிகளும் பொய் திருடு முதலியவைகளும் அடியோடு அகன்றன. பிராம்மணர்கள் வேதமோதி விதிப்படி கர்மாக்களைச் செய்தனர். ஸ்த்ரீகள் கற்புடன் பதி பக்தி செய்தனர். வ்ரதம் பூஜை ஹோமம் யோகம் யாகம் முதலியவைகள் வளர்ந்தன. க்ஷத்ரியர் வைஶ்யர் மற்றவர் ஆகியவர் தன் தன் கர்மாவில் ஈடுபட்டனர். எங்கும் விஷ்ணு கதையும் பூஜையும் நடைபெற்றன.

## த்ருதீயாம்சம் – பதினாறாம் அத்யாயம்.

கல்கி அரசாளும்பொழுது வேதமும் தர்மமும் க்ருத யுகமும் தேவரும் சராசரமான ஸமஸ்த பிராணிகளும் ஸந்தோஷமாக இருந்தன. கலியுகத்தில் தேவ பூஜை செய்பவர்கள் பற்பல தேவ விக்ரஹங்களை அமைத்து ஆடை ஆபரணங்களால் அலங்கரித்து இந்த்ர ஜாலக் காரனைப்போல் நடித்தார்கள். கல்கி ஆளுகையில் ஸாத்விக பக்தி நிறைந்திருந்தது. ஒருவர் கூட மாயைக் கும் மோஹத்திற்கும் வசப்படவில்லை. பாஷண்டியாக இல்லை. ஸாது வஞ்சகரில்லை. நெற்றிக்கிடாதவரில்லை. சம்பள நகரில் இரு மனைவிகளுடனும் ஸுகமாக வஸிக் கும் பகவானை நோக்கி அவர் தந்தை விஷ்ணு யஶஸ் புத்ரன் ஒரு யாகம் செய்யவேண்டுமென கூறினர்.

ஓம்: தத்: ஸத்:

சித்த மருந்துகளில்



நிறைந்த சாதனைகள்!

# நல் வாழ்வுப்பணி

## "சித்த மருத்துவத்தின் சிறப்பு"

சித்தர்களின்

அளவிலாப் பெருமைக்குச் சிறந்த அத்தாக்ஷி

K. T. கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரியின்

## "மேல்மாயில் மருந்து"

கருநிற, செந்நிறப் படைகள், தடிப்புகள், சொறி, மற்றும் மேகநீர் பரவியதனுல் ஏற்படும் சகிக்கமுடியாத ரணங்கள் முதலான நாட்பட்ட தோல் சம்மந்தமான ரோகங்களைக் குணமாக்கவல்ல இணையற்ற நிவாரணி.

.............. *முழு விவரங்களுக்கு எழுதவும்.* ..............

சித்தர் டாக்டர்

K. T. கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரி & சன்ஸ்,

5/22 மேல்மாயில் P. O., N. A. DT.

Printed & Published by A. Venkataraman at The Sri Meenakshi Press, Sirkali.
Editor: Srivathsa V. Somadeva Sarma.